# இரண்டே வருடங்களில் விற்பனையில் முதல் இடம்

# JOHNSON®

# மிக்ஸர் கிரைண்டர்

25 வருடத்திற்கு மேற்பட்ட அனுபவமும், இந்தியாவிலே சமையலறைச் சாதனங்களில் ஏராளமான வகைகளும் கொண்ட ஜான்சனின் சீரிய படைப்பு ஜான்சன் மிக்ஸர்—கிரைண்டர். எங்கெங்கும் அறிமுகப் படுத்தினாலும் ஐயமின்றி தலை சிறந்ததென இரண்டே வருடங்களில் பீடு நடை போடுகிறது.

ஏன் எனக் கேட்பின் :

---

இலவசம்! தனி எவர்சில்வர் கிண்ணம்! உலர்ந்த அரவைக்கென தனியான எவர்சில்வர் கிண்ணமிருப்பதால் மசாலாக்களின் மணமும், ருசியும் மில்க் ஷேக்குகளில கலக்காமல் பாதுகாப்பு அளிக்கிறது.



---



அதிக சுகாதாரம் பாகங்களை எளிதாக கழட்டும்படி தயாரிக்கப் பட்டிருப்பதால் நீங்கள் துப்புரவாகக் கழுவ முடிகிறது. உணவுப் பண்டங்களின் துகள்கள் உள்ளே நின்று விடும் சந்தர்ப்பம் இல்லை.

---

முழுமையான பாதுகாப்பு. பிளேட் பாகங்கள் இரு கிண்ணங்களிலும் உறுதியாக இணைக்கப் பட்டிருப்பதால் இயக்கத் தில் பிளேட் பறந்து விடாமல் பாதுகாப்பு அளிக்கிறது.



---



கன ரக ஓட்டம் அதிக உறுதியான 450 வாட் மோட்டார் நமது இந்திய சமையலுக்கென்றே சிறப்பாக அமைக்கப் பட்டிருக்கிறது. 45 நிமிடங்கள் நிறுத்தாமல், தடையின்றி ஓட்டலாம்.

---

மற்ற சிறப்பு அம்சங்கள்:

- மோட்டார் குளிர்ச்சியாக இருப்பதற்கென தனியான காற்றோட்டம்
- சீரிய கலவை மற்றும் அரவைக்கென மேம்படுத்தப்பட்ட பிளேட் அமைப்பு
- ஒரு வேகத்திலிருந்து மற்றொரு வேகத்திற்கு செம்மையாக மாற்ற இஞ்சர் ஸ்விட்ச்
- ஒரு வருடத்திற்கு உத்திரவாதம் ஜான்சன்

JOHNSON MIXER-GRINDER

**JOHNSON®**

## இயக்கத்திலும், ஆற்றலிலும் இணையிலாச் சிறப்பு கொண்டது

ASP-SE-8001A



✕ ஹாலிவுட் மனோரமா டீன்ஜோன்ஸ், மைக்கேல் லீ, மெகானிக் டேவிட் டாம்லின்ஸன், கதாநாயகன் பட்டிஹாக்கெட்

**சென்னையில் அண்மையில் ஓடிய Love Bug என்ற படத்தில் கதாநாயகி டீன் ஜோன்ஸ் பார்ப்பதற்கு அசல் மனோரமா மாதிரியே இருந்தார். படம் பார்த்த ரசிகர்கள் அவர் திரையில் தோன்றியதும் ''மனோரமா!'' என்று உற்சாகக் குரல் கொடுத்து அழைத்து மகிழ்ந்தனர். மனோரமா Love Bug திரைப்படம் பார்க்கச் சென்ற போது —**



✕ மனோரமாவைச் சூழ்ந்துகொண்ட ரசிகர்கள்

படம் ஆரம்பமாயிற்று. கதாநாயகன் கதாநாயகியைச் சந்திக்கும் முதல் கட்டம். மனோரமாவுடன் வந்திருந்த ஒருவர் ''என்னங்க அந்தப் பொண்ணு உங்க மாதிரியே இருக்கா'' என முணு முணுத்தார். மனோரமா என்னைப் பார்த்து ''நீங்க என்ன நினைக்கிறீங்க?'' என்றார். இதற்குள் பார்த்துக் கொண்டிருந்த மக்களிடையே யிருந்து ''ஹாய் மனோரமா'' என்ற குரல்கள் எழுந்தன. அப்புறம் சந்தேகத்துக்கு இடமேது?

இடைவேளை வந்தது. எல்லோரும் 'காப்பி' என்றபொழுது ''எனக்கு டீ'' என்றார் மனோரமா. காப்பி கொண்டு வந்த பையன் ''இங்கு டீ கிடையாதம்மா. காப்பியே சாப்பிடுங்க'' என்றான். ''எனக்குப் பழக்கம் கிடையாது தம்பா. டீ இருந்தால் கொடு இல்லாட்டா எதுவுமேவேண்டாம்'' என்றார். மூன்றே நிமிடங்களில் ருசியான டீ வந்துவிட்டது. படம் முடிந்து நாங்கள் வெளியே வரவும் பலர் மனோரமாவைச் சூழ்ந்து கொண்டனர். ரசிகர்கள் ஒவ்வொருவரும் கேள்விக் கணைகளைத் தொடுக்க ஆரம்பித்தார்கள்.

''அந்தக் கதாநாயகியோட நடிப்பைப் பற்றி நீங்க என்ன நினைக்கிறீங்க?''

''மிகச் சிறப்பாகவே நடித்திருக்கிறார். டீன் ஜோன்ஸ் பட்டி ஹாக்கெட் இரண்டுபேருமே தங்கள் பாத்திரங்களை உணர்ந்து நடித்திருந்தாலும் மெக்கானிக்காக வரும் டேவிட்டின் பங்கு இப்படத்தில் மிக அதிகம். பிரமாதப் படுத்தியிருக்கிறார்.''

''கதை அதீதமான கற்பனையாகத் தோன்றவில்லையா?''

''கதைக்குக் காலும் கிடையாது கையும் கிடையாது என்று சொல்வார்கள் இல்லையா? அதீதமான கற்பனை நகைச்சுவையாக முடியும். அப்படித்தான் முடிந்திருக்கிறது இப் படத்தில்....''

''உங்களுக்குப் படத்தில் பிடித்தமான காட்சி எது?''

''உயிருள்ள ஒரு மனிதன்; உண்மையாக நேசிக்கும் ஒருவன் தன்னை உதாசீனப் படுத்தினால் எப்படித் தற்கொலை செய்து கொள்ளத் துணிவானோ அது போல் இந்தப்படத்தில் உள்ள காரும் தற்கொலை





# 'டெஸ்ட்' கதவைத் தட்டுகிறார்!

இந்தக் கிரிக்கெட் சீஸனில் தமிழகம் தெற்குப் பிரிவு ஆரம்ப பாட்ஸ்மன் வி. சிவராமகிருஷ்ணன் தமது பாட்டிங் சாதனையினால் உன்னத ஸ்தானத்தை அடைந்திருக்கிறார். இவர் 1981 பிப்ரவரிக்குள் முதல் தர ரஞ்சி பந்தயங்களில் இரண்டாயிரம் ரன்களைக் குவித்ததோடு, ரஞ்சித் கோப்பைப் பந்தயங்களில் 600 ரன்களை எடுத்து, சராசரி 120 ரன்கள் எடுத்த தலைசிறந்த தமிழக பாட்ஸ்மனாகப் புகழ் பெற்றுள்ளார்!

அவரது சாதனைப் பட்டியல் இதோ:

| | |
|---|---|
| ஹைதராபாத்துக்கு எதிராக | 51 |
| கேரளத்துக்கு எதிராக (நாட் அவுட்) | 165 |
| ஆந்திரா குழுவுக்கு எதிராக | 177 |
| தமிழக அணி கேப்டனாக இலங்கையில் | 97 |
| புச்சி பாபு பந்தயத்தில் ஹைதராபாத் அணிக்கெதிராக | 99 |
| தியோதர் கோப்பைப் பந்தயத்தில் மத்திய பிரிவுக்கெதிராக (நாட் அவுட்) | 88 |
| திலீப் கோப்பைப் பந்தயத்தில் மத்திய பிரிவுக்கெதிராக | 104 |
| ஹரியானா குழுவுக்கு எதிராக முதல் இன்னிங்கில் | 70 |
| இரண்டாவது இன்னிங்கில் | 95 |

சிவராமகிருஷ்ணனின் சிறப்புக்களைக் கவனித்து வரும் ரசிகர்கள் ஆவலுடன் எதிர்பார்ப்பது அவரது டெஸ்ட் பிரவேசத்தைத்தான். கதவைத் தட்டுகிறார் சிவராமகிருஷ்ணன். தேர்வுக் குழுவினர் திறக்க வேண்டுமே கதவை!

படம்: பாலாஜி — குண்டுமணி

செய்துகொள்ள ஓடுகிறது. ஒரு பாலத்தின் மேல் நின்று கொண்டு தண்ணீரில் விழ முயற்சி செய்கிறது. அதனை உதாசீனம் செய்த உரிமையாளன் ஓடிவந்து கெஞ்சிக் கூத்தாடித் தற்கொலை செய்துகொள்ள வேண்டாமெனத் தடுக்கக் கடைசியில் மனமிரங்கி கீழே இறங்குகிறதே! நினைத்து நினைத்து நான் ரசித்துச் சிரித்த காட்சி இதுதான்.''

''உங்கள் வாழ்க்கையில் இது மாதிரி கார் சம்பவம் ஏதும் நடந்திருக்கிறதா?''

''இம்மாதிரி அற்புதம் ஏதும் நிகழவில்லை என்றாலும் நான் சிறுமியாக இருந்த பொழுது என்னுடன் படித்த தோழி ஒருத்தியின் வீட்டுக்குச் சென்றபோது நடந்ததைக் கூறுகிறேன். அவள் அண்ணன் காரை ஸ்டார்ட் செய்ய ஆரம்பித்து ஸ்டார்ட் ஆகாமல் போகவே கொஞ்சம் உரக்கவே ''ராஜா சீக்கிரம் ஸ்டார்ட் ஆயிடும்மா. எல்லாரும் நம்பளைக் கேலியாப் பார்க்கறாங்க இல்லையா?'' என்றார். அடுத்த கணம் ஸ்டார்ட் ஆகிவிட்டது. பிறகு முதல் கியரைப் போடுவதற்கு முயற்சி செய்தார். விழமாட்டேன் என்றது. ''என்னடா இப்படி எல்லாம் வம்பு பண்றே? சீக்கிரம் போக வேண்டாமா'' என்று கொஞ்சவும் கியர் விழுந்தது. எங்களை எல்லாம் ஏறிக்கொள்ளும்படி கூறினார். நாங்கள் கதவைத் திறக்கப் பார்த்தோம். முடியவில்லை. ''இப்படியெல்லாம் வம்பு பண்ணக் கூடாது. நீ சமர்த்தில்லையா?'' என்று சொல்லிக் கதவைத் தொட்டார். திறந்து கொண்டது. ஒரே வியப்பு. ரொம்ப நேரத்துக்குப் பிறகுதான் விவரம் தெரிந்தது. கார் தொந்தரவு தருவது போலப் பாசாங்கு செய்து இவர் கெஞ்சினதும் அது சொன்னபடி கேட்டது போல் நடித்திருக்கிறார். உண்மையில் காரில் எந்த விதக் கோளாறும் இல்லை!''

அமைப்பு: ''சலன்''

மனோரமா புகைப் படம்: பாஸ்கர்

பட ஸ்டில்: வால்ட் டிஸ்னி



# 'மிஸ்டர் விசு! இதுவும் ஒரு நகைச்சுவையா?'



விசு தயாரித்து நடித்திருக்கும் 'மோடி மஸ்தான்' நாடகத்தைக் கடந்த வாரம் பார்க்க நேர்ந்தது. காது கேளாதவர் பாத்திரத்தை எவ்வளவு ஏளனப் படுத்த முடியுமோ அவ்வளவு சிறுமைப்படுத்தி எழுதியுள்ளார் விசு.

கதாநாயகியின் தந்தை இருந்தும் இல்லாதவர் என்ற நிலையை உண்டாக்கத்தான் அவரைக் காது கேளாதவராக ஆக்கினேன் என்று கல்கி பேட்டியில் குறிப்பிடுகிறார் விசு. (8-2-81 இதழ்) ஆக, உடல் ஊனமானவர் எதற்கும் உபயோகமில்லை என்பதை மறைமுகமாகச் சொல்கிறார். என்னுடன் அவர் வரட்டும். சென்னையில் மட்டுமே எவ்வளவு உடல் ஊனமானவர்கள் சாதாரணமான மற்றவரை விட பன்மடங்கு வாழ்க்கையில் உயர்ந்து நல்ல நிலைமையில் இருக்கிறார்கள் என்பதைக் காட்டுகிறேன்.

காது கேளாதவரைப் பழிக்கவோ கேலி செய்யவோ இல்லை என்கிறார் விசு. இதை ஏற்பதற்கே முடியாது. ஓர் உதாரணம்: பெண்டாட்டி தாசனாக வரும் பாத்திரம் வெகு நாள் பிரிந்திருந்த தன் மனைவியுடன் சந்தோஷமாக ஒரு மணி நேரம் இருக்க எண்ணும் நேரத்தில் காது கேளாதவர் அவரிடம் வருகிறார். தன் சந்தோஷம் தடைபட ஆத்திரம் அடைந்த பெண்டாட்டி தாசர், காது கேளாதவரைத் தொண்டை கிழிய திட்டுகிறார்: ''ஏ செவிட்டுப் போணமே! ஏ செவிட்டு முண்டமே! ஏ செவிட்டுக் கழுதையே!'' என்று. நாடக அரங்கம் முழுவதும் ஐந்து நிமிடம் கைதட்டல் சிரிப்பு.

இந்த வசனங்கள் ஒரு காது கேளாதவரையோ, அவரது மனைவியையோ அல்லது அவரது குடும்பத்தினரையோ எவ்வளவு கஷ்டப்படுத்தியிருக்கும் என்று சிறிதாவது எண்ணிப் பார்த்தாரா விசு?

சென்னை-33 — டி. ஏ. பி. வரதகுட்டி

செவிடர்களின் பிரத்தியேகமான பள்ளியில் எஸ். எஸ். எல். ஸி. வரையில்தான் படிக்கலாம். மேலே படிக்க விரும்பினால் சாதாரணப் பள்ளியில்தான் சேர வேண்டும். செவிடர்களால் சாதாரணப் பள்ளியில் நடத்தும் பாடத்தைக் கேட்க இயலவில்லை.

அரிமா சங்கம் முதலிய சேவை நிறுவனங்கள் கண் தெரியாதவர்களுக்குப் படித்துக் காட்டுவது போல் காது கேட்காதவர்களுக்கும் இலவசமாகப் படிப்புச் சொல்லிக் கொடுத்துத் தொண்டு செய்தால் நலமாயிருக்கும்.

சென்னை-17 — கமலா சீனிவாசன்

திரு இராமகிருஷ்ணன் ''ஊனமுற்ற ஆண்களைப் பெண்கள் மணந்து கொள்கிறார்கள்; ஊனமுற்ற பெண்களை ஆண்கள் மணந்துகொள்ள முன்வருவதில்லை'' என்று கூறியிருக்கிறார். குமாரி ஷரீன் பீட்டர்ஸ் அவர்களும் இதே கருத்தை எதிரொலிக்கிறார். இது சரியல்ல. உதாரணமாக என்னைப் பற்றியே கூறுகிறேன். ஐந்து வயதிலேயே இளம்பிள்ளை வாதத்தினால் என் இரு கால்களும் ஊனமாகிவிட்டன. எனக்குத் திருமணம் ஆகி 27 ஆண்டுகள் ஆகின்றன. திருமண வயதில் 2 பையன்கள் இருக்கிறார்கள். என் கணவர் இராணுவத்தில் ஜூனியர் கமிஷன் ஆபீஸராக இருந்து ஓய்வு பெற்றுத் தற்போது தமிழ் நாடு அரசு பணியில் உள்ளார். எனக்குத் தாய் வீட்டில் சொத்து எதுவும் இல்லை. என்னைத் திருமணம் செய்து கொண்டதிலிருந்து இதுவரை எவ்வித மன வேறுபாடும் இன்றி இயல்பாகவே வைத்திருக்கிறார். என்னை எல்லா இடங்களுக்கும் மகிழ்ச்சியாக அழைத்துச் செல்கிறார். தற்போது சிறுபான்மை அளவில் நடக்கும் இம்மாதிரித் திருமணங்கள் காலப் போக்கில் பெரும்பான்மையாக நடக்கும் என்று உறுதியாக நம்புகிறேன்.

ஒசூர் — கலைவாணி துரைசாமி

மோகனப் புன்னகை பட விமர்சனத்தில் விமர்சகர் சிவாஜியை ''சிவாஜி என்ற இளைஞர்'' என்று குத்திக் காட்டுகிறார். (15-2-81 இதழ்) கதையிலோ அல்லது அவரது நடிப்பிலோ 'வெயிட்' இல்லையென்றால் சொல்லிக் காட்டலாம். வயதுக்கு ஏற்ற ரோல் என்று மீண்டும் தூபம்போட வேண்டாம்.

ஜெய்ஹிந்த் நகர் — அ. முனியாண்டி

மிஸ்டர் மஸ்டர்டு, ''நத்திங் வில் பி ஹாப்பன் டு டமில்'' என்று கூறியுள்ளீர். தமிழுக்கு ஒன்றும் ஆகவில்லை. உம் ஆங்கிலப் புலமைதான் பூஜ்யம். பரிசைக் கொடுத்து விட்டு இப்படியா வழிவார்கள்?

திருப்பதி — மாலா

(கடிரு செய்த தவறல்ல. அச்சுப்பிழை: புரூஃப் பார்க்கையில் கவனக் குறைவு — ஆர்.)

தயாரிப்பாளர், டைரக்டர் தசரதன் பக்திப் படம் எடுத்தது பெரிதில்லை. அதன் வழியே நடப்பதுதான் முக்கியம். எல்லாரும் இறைவழி நடக்க உதவுகிறது. — ஒரு பாத யாத்திரைக் கட்டுரை.

ஈரோடு — சௌந்தரராஜன்

கல்கி வாசகர்கள் ஞாபக சக்தி இல்லாதவர்கள் என்ற நினைப்போ உமக்கு? 14ஆம் பக்கத் துணுக்குக்குப் போட்ட படத்தையே 63ம் பக்கத் துணுக்குக்கும் போட்டிருக்கிறீர்களே!

வேலூர் — ஆர். கோபாலகிருஷ்ணன்

தூரிஞ்சி ஆற்றில் கவிழ்ந்த ரயில் பல உயிர்களைக் குடித்துத் தமிழகத்தைத் துயர வெள்ளத்தில் மூழ்கடித்ததைத் தொடர்ந்து வாணியம்பாடி ரயில் விபத்து (படம்) ஒரு வேதனை ராகம் பாடியுள்ளது.

ரயில்வே அமைச்சர் கேதார் பாண்டேக்கு விபத்து நடந்த இடத்துக்குக்கூட வரமுடியாத அளவுக்குப் புதிய பொறுப்புகளின் கனம்! கமலபதி திரிபாதி இந்த அளவுக்கு மூட்டைகளைக் கட்டி வைத்து விட்டுப் போயிருக்கக் கூடாது!

வாணியம்பாடி விபத்தைப் பற்றிப் பேசி முடித்து நாக்கில் உமிழ்நீர் உலருவதற்குள் கோரக்பூருக்கும் சாட்ராவுக்கும் இடையே ரயில் விபத்து. முதலில் போன வண்டியை 'அபாயச் சங்கிலி' இழுத்து எவரோ நிறுத்தியிருக்க, பின்னால் வந்த வண்டி நின்ற வண்டி மேல் மோதி இருபது பேர் மரணம். பலருக்குக் காயம்.

வாணியம்பாடி இறப்பு எண்ணிக்கை 23 தானாம். 'இத்தகைய கோர விபத்தில் இறந்தவர்களின் எண்ணிக்கை இவ்வளவு குறைவாக இருக்க முடியுமா' என்று மக்கள் கேட்கவில்லை. இந்திரா அரசின் மத்திய அமைச்சர் ஆர். வி. சுவாமிநாதனே ஸேம் ஸைட் கோல் போட்டிருக்கிறார்.

இந்த நடுவில் சென்னை சென்ட்ரல் ஸ்டேஷனுக்குள்ளேயே ரயில் விபத்து. அப்புறம் சென்னை கோட்டை — பீச் ஸ்டேஷன் இடையே ஒரு சரக்கு வண்டியில் சில பெட்டிகள் கழன்று எலெக்ட்ரிக் ட்ரெயின் போக்குவரத்து பாதிக்கப்பட்ட செய்தி. போதாக் குறைக்கு நீலாஞ்சல் எக்ஸ்பிரஸ் ரயில் பாதையிலிருந்து இறங்கிப் பயமுறுத்திய விபத்து...

எதனால் இம்மாதிரியான விபத்துக்கள் நிகழ்கின்றன? ரயில்வே நிர்வாகத்தினரிடமும் பொறி இயலாளரிடமும் தொழிற் சங்கத் தலைவர்களிடமும் பேசியபோது கிடைத்த தகவல்களைத் தொகுத்தளிக்கிறேன்.

சமீபத்தில் நிகழ்ந்த பல ரயில்விபத்துக்களில் சரக்கு வண்டிகளுக்கும் தொடர்பு இருப்பது குறிப்பிடத் தக்க அம்சம். அதோடு இத்தகைய விபத்துக்கள் இரவு 12 மணி முதல் விடியற்காலை 3 மணிக்குள் நிகழ்வதையும் கவனிக்க வேண்டும். இந்த நேரத்தில்தான் மனிதன் தவறிழைப்பதற்கான சாத்தியக் கூறுகள் மிகுதி. எப்படிப்பட்டவனுக்கும் தூக்கம் வரும் நேரம் இது. சற்று அயர்ந்தாலும் போதும், விளைவு பெரு விபத்தில் கொண்டு விடும் இந்தத் துறையில். இரவு பன்னிரண்டு மணியோடு ஒருவரது ட்யூட்டி முடிவது போலவும், மற்றவரது வேலை பன்னிரண்டு மணிக்குத் தொடங்குவது போலவும் Cut shift முறையைச் சம்பந்தப்பட்ட அனைவருக்கும் நிர்வாகம் அமல் படுத்த வேண்டும். இடைஞ்சல்கள் உண்டு தான். பயணிகளின் உயிர் இந்தச் சிரமங்களையும் செலவுகளையும் விட முக்கியமானது.

முன்பு நீராவி என்ஜினில் சரக்கு வண்டிகள் ஓடிக் கொண்டிருந்தன. நீராவி என்ஜினின் இழுப்புச் சக்திக்கேற்ப இருபத்தைந்தோ முப்பதோ சரக்குப் பெட்டிகள் இணைக்கப் படும்... தற்போது டீசல் என்ஜின்கள் இழுப்பதால் அதிகப்படியான பெட்டிகள் இணைக்கப்பட்டு அதிபாரம் இழுக்கப்படுகிறது. ஆனால் சரக்குப் பெட்டிகளோ பெரும்பாலும் ரொம்பப் பழையனவே. இழு திறனின் அதிகரிப்பால் இந்தப் பழைய மாடல் சரக்குப் பெட்டிகளின் இணைப்புகள் விடுபடும் சாத்தியக் கூறுகள் அதிகரித்து விட்டன!

சிக்னல் கோளாறினால் விபத்துக்கள் நிகழ்ந்தாலும் பணியாளரின் அசிரத்தையால் நிகழும் விபத்துக்களே அதிகம். இத்தகைய அசிரத்தை எதனால் நிகழ்கிறதென்று ஆராய்ந்து ஆவன செய்ய வேண்டியது நிர்வாகத்தின் கடமை. 10 ஸ்டேஷன் மாஸ்டர்களுக்கு ஒரு 'Relief hand' என்றுதான் அனுமதிக்கப்பட்டிருக்கிறது. மற்றய ஊழியர் நிலையும் இது மாதிரிதான். குறிப்பிட்ட

# ரயில் விபத்துக்கள்

ஆய்வுக் கட்டுரை



தினத்தில் இரண்டு பேர் லீவில் போகவேண்டிய கட்டாயம் நேர்ந்தால் டிரைவர் ஆகட்டும், கார்ட் ஆகட்டும், ஸ்டேஷன் மாஸ்டர் ஆகட்டும் அதிகப்படியான நேரம் வேலை செய்தாக வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படுகிறது. அதுவும் இரவு நேரமாக இருந்துவிட்டால் களைப்பு மிகுதியில் அசிரத்தையும் தவறும் ஏற்படச் சாத்தியக் கூறுகள் அதிகம் தானே!

முன்பெல்லாம் ஒரு குறிப்பிட்ட ரயில் பாதையில், டிரைவர், கார்ட் போன்று முக்கியப்பட்டவர்கள் பல்லாண்டு தொடர்ச்சியாகப் பணிபுரிய அனுமதிக்கப்பட்டனர். அனுபவத்தால், பழக்கத்தால் அக்குறிப்பிட்ட பாதையில் எங்கே மேடு, எங்கே பள்ளம், எந்த நேரத்தில் எந்த வண்டி வரும் போன்று பலவித விஷயங்களும் அவர்களுக்கு அத்துப்படி. ஆனால் தற்போது சிபாரிசு, வேறுவித வற்புறுத்தல்கள் காரணமாகத் திமர் திமரென மாற்றல்கள், Reserved vacancies எனப்படும் ஒதுக்கப்பட்ட இடங்கள் காரணமாய் அனுபவமே சற்றுக்கூட இல்லாதவர்களிடம் கடினமான பொறுப்புக்கள் அளிக்கப்படுகின்றன. அனுபவமும், திறமையும், தகுதியும் வாய்ந்த சீனியர்களைக் கீழே தள்ளி ஜூனியர்களுக்குப் பதவி உயர்வு அளிக்கப்படுவதால் ஒதுக்கப்பட்டவர்களுக்கு அதிருப்தி ஏற்படுவது ஒருபுறமிருக்க அனுபவம் இல்லாதவர்கள் வண்டி ஓட்டும் பொறுப்பை ஏற்கும்போது விபத்துக்கள் அதிகரிக்கின்றன.

சென்னைக்கும், விழுப்புரத்துக்கும், சென்னைக்கும் எண்ணூருக்கும், சென்னைக்கும் அரக்கோணத்துக்கும் இடையே Track Circuting செய்யப்பட்டு உள்ளது. இம்முறையினால் ஒரு ஸ்டேஷனுக்கும் இன்னொரு ஸ்டேஷனுக்கும் இடையே எந்த வண்டி போனாலும் ஸ்டேஷனில் அது தெரிந்துவிடும். ரொம்பச் செலவாகும் திட்டம்தான் இது! ஆனால் மக்களின் உயிர் சம்பந்தப்பட்ட இடத்தில் செலவு பார்க்கலாமா? நாளா வட்டத்தில் இம்முறையை எவ்வளவு விரைவாக முடியுமோ அவ்வளவு விரைவாக எல்லாப் பாதைகளிலும் புகுத்த முயல வேண்டும்.

ரயில்வே நிர்வாகம் மத்திய அரசுக்கு வட்டியாக சுமார் 300 கோடி ரூபாய் ஒவ்வொரு ஆண்டும் கொடுக்கிறது. அதோடு அரசு கொள்கைக்கேற்ப நஷ்டத்துக்குச் சரக்கு வண்டிகளில் பல அத்தியாவசியப் பண்டங்களை ஏற்றிச் செல்ல வேண்டிய நிலை. இந்த இருவகைப் பணமும் ரயில்வே நிர்வாகத்துக்கே ஒதுக்கப்படுமானால் Track Circuting மட்டும் என்ன வேறு பல அற்புதங்களையும் நிகழ்த்த முடியும். இவ்விதம் நவீனப்படுத்திய பின் அதன் பலனாக ரயில்வே முன்னைவிடவும் அதிகம் சம்பாதிக்கத் தொடங்கும். நீண்ட கால நோக்கில் அரசுக்கு நஷ்டம் உண்டாகாது.

பிருந்தாவன் எக்ஸ்பிரஸில் உள்ளது போன்ற ரேடியோ, போன் வசதி எல்லா வண்டிகளுக்கும் அமைய வேண்டும். பூமிக் கடியிலான கேபின் மூலம் எல்லா ஸ்டேஷன்களுக்கும் இடையே டெலிபோன் தொடர்பு தேவை. ஆட்டோமாடிக் சிக்னல் முறையை விரிவு படுத்துதலும் அவசியம். சிக்னல் இல்லாமல் எந்த வண்டியாவது ஸ்டேஷனைத் தாண்டினால் ஸ்டேஷன் மாஸ்டரையும், ஸ்விட்ச்மேனையும் எச்சரிக்கைப்படுத்தும் அபாய மணிச் சத்தம் ஒலிக்க வேண்டும். இப்படிப் பல பாதுகாப்பு அம்சங்களைப் புகுத்த உடனடி நடவடிக்கை எடுத்தாக வேண்டும்.

அரக்கோணத்தை அடுத்து உள்ள சித்தேரி ஸ்டேஷனிலிருந்து கேதாந்தப்பட்டி ஸ்டேஷன் வரைக்கும் புதிதாக அமுலாக்கப்பட்டு நடைமுறையில் இருக்கும் Block Station system எனப்படும் சிக்னல் முறைப்படி ஸ்டேஷன் மாஸ்டர்களின் கவனத்துக்கு வராமலேயே காபினில் இருக்கும் ஸ்விட்ச்மேன் வரும் வண்டிகளுக்கு சிக்னல் கொடுக்க முடியும். இது போன்ற அமைப்புக்கள் அபாயகரமானவை என்று 1979ம் ஆண்டு அனைத்திந்திய ஸ்டேஷன் மாஸ்டர்கள் சங்கம் ஓர் அறிக்கை சமர்ப்பித்துள்ளது. வாணியம்பாடி விபத்து தொடர்பாகவேனும் Block Station system முறையில் புனர் பரிசீலனை தேவை.

நாட்டில் கலர் டெலிவிஷனைக் கொண்டு வந்தாக வேண்டிய அவசியத்தைப் பற்றி வசந்த் சாத்தே பேசாத நாள் கிடையாது! அதற்காகும் செலவை நாம் பொருட்படுத்தக் கூடாது என்பது அவர் வாதம்! ரயில்வேக்கு அனாவசியமாகச் செலவழித்து என்ன பயன்? ஏதோ சில உயிர்கள் பிழைக்கலாம். அவ்வளவுதான். ஆனால் கலர் டி. வி. கொண்டு வந்தாலோ, விபத்துக்களால் தடம் புரண்ட ரயில் பெட்டிகளைக் கலர் டி. வி.யில் தத்ரூபமாகப் பார்க்க முடியுமே!

கட்டுரை: பி. ரங்கநாயகி

மேலட்டை: கல்பனா

### நன்றி, கேப்டன் ரஹூத்!

பழுதடைந்த விமானத்தைப் பத்திரமாகத் தரையில் இறக்கினார் பைலட் கேப்டன் ரஹூத், மீனம்பாக்கம் நிலையத்தில். நூற்றுப் பதினைந்து உயிர்கள் மீண்டும் பிறவியெடுத்த சந்தோஷம் கொண்டன.

வெளியே வந்த கேப்டன் ரஹூத்தைப் பயணிகள் சூழ்ந்துகொண்டு, தமது கைக்கடிகாரங்களையும், தங்கச் சங்கிலிகளையும், கத்தையாகக் கரன்ஸி நோட்டுக்களையும் பொழிந்தனர். சிலர் முத்தங்களை!

— சாருகேசி

ஆதாரம் ; சண்டே ஸ்டாண்டர்ட்

படம் நன்றி : தினத்தந்தி



# மகரநாயகி

● பழைய காலத்துச் சம்பிரதாய 'ராஜா'க் கதை. தூது போவது; காதல் கொள்வது; குறுக்கே புகும் வில்லனை முறியடிப்பது (கத்திச் சண்டை) இறுதியில் ஒலைச் சுவடிகளை காக்கத் தியாகம் — அதுதான் சொல்லியாயிற்றே பழைய காலத்துக் கதை என்று?

நாட்டிய நாடகம் நெடுகிலும் ஜெயலலிதா ஆக்கிரமிக்கிறார். குறிப்பாக விரக தாபத்தை வெளியிடுவதிலும், அரசவை முன் நின்று ஆடிப்பாடும்போதும் உணர்ச்சிகளை நன்கு காண்பித்துத் துடிப்புடன் ஜொலிக்கிறார். ஆனால் அவருடைய நாட்டியம், நடிப்பு இவற்றுக்கு ஓரளவாவது ஈடு கட்டுகிறாற் போல வேறு யாருமே அமையாதது மிகவும் துரதிர்ஷ்டம். மற்ற பாத்திர அமைப்புகளில் கொஞ்சம் கூடச் சிரத்தை காண்பித்து இருந்தால், நாடகம் இன்னும் நன்றாக அமைந்திருக்கக் கூடும்.

இன்னொரு பலவீனமான அம்சம்: இசை. சினிமா சங்கீதமாகவும் இல்லாமல் கர்நாடக மாகவும் இல்லாமல் இரண்டுக்கும் இடையில் தொய்வுடன் ஆ.இ.ரே. மெல்லிசைப் பாடல்களைப்போல் ஒலிக்கிறது. அதுவும் கவியரசின் எடுப்பான வரிகளைக் ('துள்ளித் துள்ளி ஓடுதடி குமரி ஆறு — இதில் குளிப்பதில் உள்ள சுகம் நூறு நூறு') கேட்கும்போது, மெட்டு மட்டும் இனிமையாக இருந்தால் எவ்வளவு அருமையாக இருக்கும் என்ற ஏக்கம் எழுகிறது.

யானையுடனும், குரங்குடனும் ஜெயலலிதா பேசிப் பாடுவது போல் ஒரு காட்சி வருகிறதே, நகைச் சுவைக்கா அல்லது புதுமைக்கா?

பாடுபவர்கள் குரல் — குறிப்பாக ஆண் குரல் — தெளிவாகவே இல்லை. ஆனால் யோகம் சந்தானம் மட்டும் விதிவிலக்கு. எந்த வகைப் பாட்டானாலும் சரி, பளிச்சென்று வெட்டு கிறாற்போல் பாடி, நாடகத்துக்குப் பெருமை சேர்க்கிறார். 'தமிழ்ச் சங்கப் புலவர் வாழியவே' பாட்டு மனத்தில் ஒலிக்கிறது. அவருக்கு நம் தனியான பாராட்டுக்கள்.

உலகத் தமிழ் மாநாட்டுச் சூழ்நிலையில் மதுரையில் இந்த நாடகம் நடைபெற்ற போது நாடகம் எடுப்பாக அமைந்திருக்கலாம். ஆனால் அந்தப் பின்னணி இல்லாமல் சபாக்களில் நடைபெறுகிறபோது தேவையான மாறுதல்கள் செய்து இன்னும் கவர்ச்சியாக அமைய முயற்சி எடுத்துக் கொள்ளலாமே.

— தமயந்தி

⁕ யோகம் சந்தானம்




சண்டைக் காட்சி 'த்ரில்லிங்கா' எடுக்க வேண்டி இருக்கு! நாடாளுமன்றத்திலே 'ஷூட்டிங்' நடத்த அனுமதி கொடுக்கணும்!


ரொம்ப ஜோரா மகாராஜா மாதிரி இருக்கே!
172,210 கோடி
திவாரி


டாக்டர் பட்டம்
டாக்டர் பட்டம்

# 1, 72, 210 கோடி!

ஆறாவது ஐந்தாண்டு திட்டத்துக்குதான் இவ்வளவு செலவாகப்போகிறது!

எங்கிருந்து வரப்போகிறது இந்தப் பணம்? நீங்களும் நானும்தான் மறை முகமாகவும் நேர்முகமாகவும் அகமும் முகமும் மலர மகிழ்ச்சியோடு தந்து இந்திரா வின் கரத்தைப் பலப்படுத்தப் போகிறோம்! நாம் தந்தது போகப் பாக்கி தேவைக்கு நாஸிக் அச்சுக் கூடம் தாராளமாய் உதவும்!

ரயில்வே பட்ஜெட் வந்துவிட்டது. பொது பட்ஜெட் வந்து கொண்டிருக் கிறது. ஆறாவது திட்டத்தின் தேவைகளை மனத்தில் கொண்டு பட்ஜெட் உருவாகி யிருக்கும். நாமெல்லோரும் மேலும் தியாகங்கள் புரியத் தயாராகிவிட்டோம்! புதிய சுமைகளைப் பரமானந்தத்துடன் தாங்க உறுதி பூண்டுவிட்டோம்!

திட்டம் தயார், பட்ஜெட் ரெடி, மக்களின் ஒத்துழைப்பு மறுக்கப்பட வில்லை. பிறகு என்ன? ஒருவேளை ஏழைமைத் தேவதை அடித்து விரட்டப்பட்டு விடுமோ? கபிட்ச அரக்கி அதனிடத்தை ஆக்கிரமித்துக் கொண்டு விடுவாளோ? கவலையே வேண்டாம்! அத்தகைய அநீதிகளுக்கு நம்முடைய ஸ்பெஷல் பாணி சோஷலிஸம் இடம் தந்து விடாது! அலாதியான ஆற்றலுடைய அது, உற்பத்தி யைக் குறைந்தபட்சமாக்கி, பணவீக்கத்தை அதிகரிக்கச் செய்யும்! விலைகள் ஸ்திரப் படுத்தப்பட்டு விட்டன என்று அரசு நம் தலைமேல் அடித்து சத்தியம் பண்ணும் போதே விலைவாசிகளை உச்சாணிக்கு உயர்த்திக் காட்டும்!

இதற்கு உதவுபடியாக கண்ட்ரோல்கள் என்ற மதி அமைச்சர்கள் உள்ள னர். அவர்கள் நாட்டில் நான்கு பெரும் பசிகளைத் திருப்திப் படுத்துவதில் திறமை சாலிகள். அரசியல் வாதியின் சோஷலிஸப் பசி, அரசியல் கட்சியின் பணப் பசி, அதிகார வர்க்கத்தின் அதிகாரப் பசி, அதர்மத்துக்கு அஞ்சாத தொழில் வர்த்தக அதிபர்களின் கறுப்புப் பணப் பசி — இந்த நான்கு பகாசுரப் பசிகளுக்கும் தீனி போடுவது என்ன சாமானிய காரியமா? இதனை வெற்றிகரமாகச் செய்வதற்காக ஒவ்வொரு ஆண்டும் கண்ட்ரோல்கள் என்ற மதி அமைச்சர்களின் எண்ணிக்கை அதிகரித்துக்கொண்டே போகிறது. மத்தியிலும் மாநிலங்களிலுமாக மொத்தம் 4000 கண்ட்ரோல்கள் உள்ளன என்று கணக்கிடப் பட்டுள்ளது என்றால் இது விஷயத்தில் அஞ்சய்யாவும் தாம் தோற்றதாக ஒப்புக்கொள்ள வேண்டியதுதானே!

உலகிலேயே மிக அதிகமான உணவு உற்பத்தி செய்யும் நாடுகளில் இந்தியா நான்காவது இடம் வகிக்கிறது. இதைக் கண்டு எங்கே கபிட்சம் நிலவ ஆரம்பித்து விடுமோ என்று பயந்து விடவேண்டாம். உலகின் மிக ஏழை நாடுகள் என்று கருதப்படுகிற 15 நாடுகளில் ஒன்றாகவே கடந்த பத்து ஆண்டுகளாக இந்தியா இருந்து வருகிறது. இன்னும் பத்து ஆண்டுகள் ஆனாலும் இந்தப் பெருமைக்குப் பங்கம் வராமல் இந்திரா பிராண்ட் சோஷலிஸம் கவனித்துக் கொள்ளும்.

தொழில் உற்பத்தி என்று பார்த்தால் உலக அரங்கில் பத்தாவது ஸ்தானம் வகிக்கிறோம் நாம். இதை அறிந்து கலக்கமடைய வேண்டாம். உலக ஏற்றுமதி மார்க்கெட்டில் நமது பங்கு அரை சதத்துக்கு மேல் போகாமல் இந்திரா பிராண்ட் சோஷலிஸம் காத்து அபயமளிக்கும்.

விஞ்ஞானிகள், பொறி இயல் நிபுணர்கள் என்று கணக்கிட்டால் அமெரிக்கா, ருஷ்யாவுக்குப் பிறகு நாம்தான் மூன்றாவது ஸ்தானம் வகிக்கிறோம். இதை எண்ணியும் கவலையில் ஆழ்ந்து விடவேண்டாம். சராசரி தனி நபர் வரு மானம் ஆண்டொன்றுக்கு ஒரு சதத்துக்குமேல் உயராமல் இந்திரா பிராண்ட் சோஷலிசம் தடுத்தாட்கொள்ளும்.

1,72,210 கோடி ஆறாவது திட்டத்துக்குச் செலவாகும் என்பது வாஸ்த வம் தான். இதனால் தேசத்தின் பொருளாதாரம் சிறந்து விடுமோ என்று பயப்பட வேண்டாம். 1970ல் தொழிலகங்களுக்கு 61 சதம் முதலீடு பாங்குகளிலிருந்தும் இதர பொருளாதார நிறுவனங்களிலிருந்தும் கிடைத்ததென்றால் 79ல் அது 37 சத மாகக் குறைந்து போயிற்று. இனிமேலும் இத்தகைய உதவுபடியான நிலைமையே வளரும். ஆறாவது திட்டச் செலவில் 97500 கோடி அரசுத்துறையில் முதலீடாகி நஷ்டங்களை அபிவிருத்தி செய்து மக்களின் மனம் குளிரச் செய்யும்.

வாழ்க இந்திரா பிராண்ட் சோஷலிஸம்! வெல்க கறுப்புப்பணப் பத்திரம்!

1981 மார்ச் 1

ரௌத்திரி மாசி 18

மலர் : 39 இதழ் : 31



கல்கி



தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள்
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்

## 9. “நீங்கதானா அது?”

“இனியா! ஹாய்! என்னது மெட்ராஸ் பூரா உங்களின் பக்கம் வந்துடுத்தா?''

இனியா சற்றே திடுக்கிட்டு, திரும்பி வஸந்தைப் பார்த்ததும் உடனே மலர்ந்தாள். ''ஏய் வஸந்த்! வஸந்த காலம் வழங்கிய ரேஸர் பிளேடுங்களைத்தான் தேடிக்கிட்டு வந்தோம்.''

'' 'தோம்'னு அப்பாவும் வந்திருக்காரா?''

''மாம்!''

''போச்சுடா! எதுக்கு இந்த வயசான காலத்திலே பேராசிரியரைப் போட்டு இப்படி அலைக்கழிக்கறே? தனியா வரக் கூடாதா? பகல் வேளையிலே என்ன பயம்? வயல்காட்டுப் பக்கம் சைக்கிளில் அழைச்சுக்கிட்டுப் போயிருப்பேனில்ல, ஒரு நீயட் சான்ஸ் போச்சு பாரு.''

''அப்பாதான் பிடிவாதமா மறுபடி இங்க வரணும்னாரு.''

''பத்தியா, உன்னைப் பார்த்ததில வந்த காரியத்தையே மறந்து போயிட்டேன். இன்னி இனி இந்த இடத்தில நீங்க ரெண்டு பேரும் ஒரு நிமிஷம் கூட இருக்கக் கூடாது.''

''ஏன்?''

''விஷயம் ரொம்பத் தீவிரமாயிடுச்சு. சந்துக்குச் சந்து கத்திக் குத்து. இப்பத்தான் ஒரு கேஸ் காஞ்சீபுரம் போயிட்டிருக்கு. உங்கப்பா வெட்டின ராரா இணைத்துல இருந்து பூதம் புறப்பட்டுடுச்சு.''

''என்ன சொல்றீங்க வஸந்த்?''

''ரத்தினச் சுருக்கமாச் சொன்னா ஆபத்து! புறப்படு மகளே!''

''அய்யய்யோ அப்பா கோயிலுக்குள்ள தனியாப் போயிருக்காரே!''

''சான்ஸே இல்லே. வா அங்க ஓடலாம். சௌகரியமா என் கையைப் புடிச்சுக்கோ.''

வஸந்த் இனியாவுடன் மறுபடி அந்தச் சிதிலமான கோயிலுக்குள் நுழைந்தான்.

பேராசிரியர் அணைந்த பைப்பைக் கடித்துக்கொண்டே கோயில் மண்டபத்தின் கற்தூண்களைப் பரிசீலித்துக் கொண்டிருந்தார்.

''ஸாரார்!''குட் மார்னிங்!''

சுஜாதா

வசந்த்! வசந்த்!



''குட் ஆஃப்டர்நூன்'' என்றார் கடிகாரத்தைப் பார்த்துக் கொண்டே.

''கொஞ்சம் திரும்புங்க.''

''ஏன்?''

''இல்லே, கத்தி கித்தி குத்தி கித்தி இருக்கான்னு பார்த்துறலாமேன்னுட்டு.''

''என்னப்பா சொல்றே?''

புரியும்படி சொன்னான். ''ஆமா? 'அங்க போகாதே ஆபத்து'ன்னு எங்கிட்டே சொல்லிட்டு நீங்களே வந்து நிக்கறீங்களே?''

''இல்லே வஸந்த். எனக்கே 'என்னடா இந்தக் கிணத்து மேலே திடீர்னு இவ்வளவு பேருக்கு இன்ட்ரஸ்ட். நாம ஏதாவது பார்க்க மறந்துட்டோமோ இன்னொரு தடவை எதையாவது விட்டுட்டேனான்னு பார்த்துறலாம்னு'தான் புறப்பட்டு வந்தேன்.''

''ஏதாவது ஆராய்ச்சியில விட்டுப் போயிருக்கா பார்த்தீங்களா?''

''ம்ஹூம். எனக்குத் தெரிஞ்சவரைக்கும் இங்க அவங்க எல்லாம் பறக்குறதுக்கு எதுவுமே இல்லே.''

''அதை ஏன் கேக்கறீங்க. இன்னிக்குக் காலையில இங்க ஒரு ஸ்டாபிங் இன்ஸிடண்ட்... ஒரு ஆள் எங்களை நோக்கி வந்தான். என்னமோ சொல்ல வந்தான். சொல்லி முடிக்கறதுக்குள்ள கத்திக் குத்து வாங்கிட்டுத் தொடரும்னு போட்டுட்டுப் போயிட்டான்.''

''அய்யோ! செத்துட்டானா?''

''இல்லே. இன்னும் உயிர் இருக்கு. விளக்கு காத்தில துடிச்சுண்டு இருக்கு. இப்ப அவனைப் பார்த்து, 'யோவ் சொல்ல வந்ததைச் சரியாச் சொல்லிட்டு அப்புறம் சாவகாசமா செத்துக்க'ன்னு விசாரிக்கத்தான் காஞ்சிபுரம் போய்க்கிட்டிருக்கோம். நீங்களும் கையோட புறப்பட்டு வந்துடுங்க. இந்த இடத்தில தனியா இருக்கறது நல்லதில்லே.''

''கொலை வரைக்கும் போறுங்கன்னு விஷயம் பெரிய விஷயம்னு தோணுது.''

பேராசிரியரும் இனியாவும் பின் சீட்டில் வீற்றிருக்க வஸந்த் ரியர் வியு மிர்ரரை அவன் மேல் சரி செய்து கொண்டான். அவனருகே கணேஷ்.

''ஸார் இந்தக் கல்வெட்டுகளில் இந்த வட்டாரத்தில ஏதாவது புதையல் இருக்கிறதைப் பத்தித் தகவல் இருக்கா?''



''ம்ஹூம். இல்லவே இல்லே.''

''ஆர் யூ ஷ்யூர்?''

''நிச்சயம். நான் இந்த வட்டாரம் முழுக்க ஒண்ணு விடாம எல்லாத்தையும் பார்த்திருக்கேன்.''

''விலை உயர்ந்த சிலை ஏதாவது இருக்க சான்ஸ் உண்டா கோயில்களில?''

''அதுக்கு ஆர்க்கியாலஜி டிப்பார்ட்மெண்டைத்தான் கேக்கணும்.''

''இன்ஸ்கிரிப்ஷன்ஸ்ல அதைப் பத்தி ஏதாவது மென்ஷன் இருக்கா?''

''இல்லே கணேஷ்! எனக்கு என்னவோ என்னைப் பல்லாவரத்துக்கு அழைச்சுட்டுப் போனவன்களையும் வீட்டுக்கு வந்தவன்களையும் பார்த்தா சரித்திரத்துக்கும் அவங்களுக்கும் ஸ்நான ப்ராப்தி கூட இல்லாதவங்க மாதிரித்தான் தோணுது.''

''ஆனா ராஜ ராஜன் கிணறுங்கற பேரு இவங்களுக்குத் தெரிஞ்சிருக்கே? உள்ளூர்காரங்களுக்கே தெரியலேயே?''

''ஸார் அந்தக் கிணத்தின் அடியிலே ஒரு தங்க மாளிகைக்குச் சுரங்கப் பாதை ஏதாவது இருக்குமோ?''

''இறங்கிப் பாத்துறேன்.''

''அல்லது இப்படி இருக்குமோ'' என்றான் கணேஷ்.

''எப்படி?''

தலையை ஆட்டி ''ம்ஹூம்'' என்றான். ''இப்ப அதைப் பத்தி யோசிக்க வேண்டாம். முதலிலே அந்த ஆளைப் பார்த்து அவன் என்ன சொல்ல வந்தான்னு அறிஞ்சுக்கலாம். அதிலதான் இருக்கு க்ளூ.''

''அந்தக் கட்டுரையிலும் இருக்கு பாஸ். அதுக்குத்தானே அந்தக் கோஷ்டியே அலைஞ்சது?''

''அந்தக் கட்டுரையைக் காப்பி வெச்சுக்கலே நான். மடத்தனம்!''

''குறிப்புகள் இருக்குமில்ல?''

''இருக்கு.''

''அதை அப்புறம் கவனிக்கலாம்.''

**கா**ஞ்சி நகரத்தின் கோபுரங்கள் தென்பட்டன. கரையோரமாகச் சென்ற பாதையில் தென்னை மரங்கள் விரைந்தன.

''ஆஸ்பத்திரி எங்க இருக்குன்னு விசாரிக்கக்க வஸந்த்.''

நெருக்கமான தெருக்களில் இருட்டு வீடுகளுக்குள் நெசவு ஜொலித்தது. பற்பல வடிவ பஸ்களில் பற்பல வடிவப் பிரயாணிகள் வரதராஜனையும் காமாட்சியையும் நோக்கி இரைந்தார்கள். ''ஆவோ ஆவோ ஏதேக்கோ வரதராஜ் ஸ்வாமிகி மந்திர்'' என்று தொந்தி குலுங்க ஓடினவர்களின் பின் வடக்கத்தி முகங்கள் விரைந்தன.

நெட்டையான மண்டபத்தின் அருகில் காரை நிறுத்தி வஸந்த் விசாரித்தான்.

''இப்படியே நேராப் போனிங்கன்னா டாக்கிஸ் வருங்க, அங்க போய் விசாரிச்சுக்கங்க.''

''சரிதான்! எல்லாருக்கும் வழி காட்டின அண்ணா பிறந்த ஊர்ல இப்படியா வழி காட்றிங்க!''

''வஸந்த் அங்க பார் ஓர் ஆம்புலன்ஸ் போறது. அதும் பின்னாலே போ.''

**ஒ**ரு சர்க்கார் ஆஸ்பத்திரிக்கு உரித்தான அத்தனை குறைநிறைகளும் இருந்தன. காரிடாரில் நூறு பேர் உட்கார்ந்திருந்தார்கள் அல்லது படுத்திருந்தார்கள். டாக்டர்களைக் காணோம். ஸ்பெஷல் வார்டில் சிலர் குடும்பமே நடத்திக் கொண்டிருந்தார்கள். நர்ஸுகள் ட்யூட்டி மாறிக்கொண்டிருந்தார்கள்.

''காஷுவாலிடியா எமர்ஜென்ஸியா பாஸ்?''

''காஷுவாலிடியே போ! இன்னும் பாரம் எழுதியே முடிச்சிருக்க மாட்டாங்க.''

கணேஷ் அந்த போலீஸ் கான்ஸ்டபிளை அடையாளம் கண்டு கொண்டான். ''இதோ இருக்காரே நம்ம 'அதுகூட சரிதான்.'''

''ஷ்...''

''வணக்கங்க. நம்மாளு அட்மிட் ஆயிட்டாரா?''

''இல்லே.''

''ஏதாவது பேசினாரா?''

''இல்லே. போயிட்டாரு.''

''என்னது!''

''ஷ்''

''வார்டு பாய் யாரையாவது கூப்பிடுங்க. பாடியை பி.எம்.முக்கு எடுத்துட்டுப் போகணும்.''

கணேஷ் அந்த மூடியிருந்த உடலைப் பார்த்தான். ரத்தக் கறை தெரிந்தது.

'அன்னியனே!, நீ என்ன சொல்ல வந்தாய்?'

''நீங்க ரெண்டு பேரும் இன்ஸ்பெக்டரைப் பார்த்துட்டுப் போயிறுங்க. குத்தின ஆளு முகம் ஞாபகம் இருக்கா?''

''ஆளையே பார்க்கலேன்னுதானே சொன்னோம்.''

''அங்க பார்த்ததாச் சொன்னீங்களே?''

''இல்லிங்க. சரியா ஞாபகப்படுத்திப் பாருங்க.''

''என்னைப் போட்டுக் குழப்பறியா நீ! இன்ஸ்பெக்டர் கிட்ட நீங்க ஆளைப் பார்த்ததாச் சொல்லிப் போட்டிருக்கேன்.''

---



மானேஜர்: இனிமேல் காரணத்தை முன்னாடி சொல்லி விட்டுத் தான் லீவு போட வேண்டும்.

கிளார்க்: எனக்கு நாளையிலேருந்து 15 நாட்கள் வயிற்று வலியாக இருக்கும்! லீவு தாருங்கள்.

- பிரியா பாலு

ஒரிசா மாநிலம் புவனேஸ்வரில் உள்ள பல்வேறு மாநிலங்களின் கலாச்சார அமைப்புக்களும் கேரள சமாஜம், கன்னட அசோசியேஷன் என்றே உள்ளன. ஆனால் தமிழ் நாட்டவர்களின் அமைப்பு மட்டும் 'ஸவுத் இந்தியன் அசோசியேஷன்' என்று பரந்த அமைப்பில் இயங்குகிறது. ஆந்திர வெள்ள நிவாரணப் பணிக்கு இவர்கள் வழங்கிய நன்கொடை ரூ 2000 கூட தென்னாட்டு மக்கள் அனைவரின் நன்கொடை என்கிற பிரமையையே ஏற்படுத்தியது.

- ஏ. விஸ்வம்



''அதுக்கு நாங்க என்ன பண்ணமுடியும்?''

''அடப் போய்யா! அவர் கிட்டவே பதில் சொல்லிக்க.''

அந்தச் சமயம் மற்றொருவன் உள்ளே நுழைந்தான். நடுத்தர வயதினனாக இருந்தான். சற்றுப் பதற்றத்துடன் காணப்பட்டான். ''நாங்க கூட உக்கல் கிராமந்தாங்க. கேள்விப்பட்டதும் அடுத்த பஸ்ஸைப் புடிச்சு ஓடியாந்துட்டேன். எங்க அந்த ஆளு?''

''எவனைக் கேக்கிறிக?''

''அதான் கத்திக் குத்துப் பட்டானே?''

''அது போயிடுச்சுங்க. அங்க பாருங்க பாடி.''

''போய்ட்டானா?'' புதியவன் சற்றுத் தயங்கி மூடியிருந்த அந்த உடலை அணுகினான்.

''பார்க்கலாங்களா?''

''தாராளமா.''

''அட!'' முகத்தை மூடியிருந்த வெள்ளைத் துணி விலக்கப்பட்ட சற்று நேரம் அந்தக் கருக்கத் தொடங்கிவிட்ட முகத்தைப் பச்சாதாபத்துடன் பார்த்துவிட்டு ''மூடிடுங்க'' என்றான். துண்டால் வாயைப் பொத்தியபடியே விலகினான்.

''காலைலதான் உயிரோட முழுசாப் பாத்தேங்க.''

''இந்தாளை உங்களுக்குத் தெரியுங்களா?'' என்றான் வஸந்த்.

''தெரியாதுங்க. ரெண்டு மூணு நாளாத்தான் பழக்கம். வீட்ல வந்து யாரோ வந்தாங்களா வந்தாங்களான்னு விசாரிச்சுக் கிட்டே இருந்தாங்க.''

''அவங்க வரத்துக்குள்ள இவன் போய்ட்டான்! ஆமா உங்க பேர் என்ன?''

''சதாசிவம்.''

''அட நீங்கதானா அது?''

''நீங்கதானான்னா?''

''உங்களைத்தான் வந்து பார்க்கும்படியா சொல்லிக்கிட்டிருந்தாரு இந்த ஆளு. அதுக்குள்ள குத்திட்டாங்க.''

''குத்தினது யாருன்னு தெரிஞ்சுதா?''

''எங்க? அவனை யாரு பார்த்தா?''

''நீங்கள்ளாம் யாரு?''

''பட்டணத்துக்காரங்க.''

''என்னை வந்து பாக்கும்படியாச் சொன்னானா? எதுக்கு?''

''அதை உங்க கிட்ட கேக்கலாம்னு இருந்தோம்.''

''சரிதான். எனக்கு ஒண்ணும் தெரியாது! நிலவரமே புரியலே. என்னமோ ஏதோ பேசி வெச்சுக்கிட்டு வெளியூர்க்காரப் பயலுவன்னாம் ஊருக்குள்ளார வந்திருக்கானுவன்னு நினைக்கிறேன். என்னமோ நடக்கப் போவுது! இவன் வெளியூர்க்காரன் மாதிரிதான் தெரியுது.''

''உங்களுக்கு வேற ஒண்ணுமே தெரியாதுங்களா?''

''ம்ஹூம்.''

கான்ஸ்டபிள் அவர்களிடம் வந்து ''ஆளு யாருன்னு தெரிஞ்சு போச்சுன்னா பாதிக் கேஸ் முடிஞ்சுரும்! ஏதாவது விரோதமா இருக்கும்'' என்றான்.

''நீங்க விசாரிங்க.''

''பைக்குள்ற கடுதாசி கிடைச்சுது. அதில அட்ரஸ் இருக்கு. நீங்க எங்கயும் போயிராதீங்க. இன்ஸ்பெக்டர் வர்ற நேரம்.''

''இருக்கங்க.''

''அப்ப நான் வரட்டுங்களா'' என்று சதாசிவம் கிளம்பினார்.

''இவரு யாரு சொல்லலிங்களே'' என்றார் போலீஸ்காரர்.

''அய்யா, நான் உக்கலுங்க. பெருமாள் கோயில் தெரு சதாசிவம்.''

''ஓ. பார்த்திருக்கேன்.''

''பயலைப் பாத்த முலமா இருந்தது. யாருன்னு கிட்டப் பாத்தேன். உள்ளூர்க் காரனில்லிங்க.''

''தெரியும்.''

''வரேன். ஏதாவது தகவல் வேணுமின்னா சொல்லி அனுப்புங்க.'' சதாசிவம் புறப்பட கணேஷ் உடனே வஸந்தைத் தனியா அழைத்து, ''வஸந்த்! நான் கான்ஸ்டபிளைச் சமாளிச்சுக்கறேன். நீ அந்தாளைப் பின் தொடர்ந்து எங்க போறான், என்னன்ன பண்றான் எல்லாத்தியும் நோட் பண்ணிண்டு வந்து சொல்லு க்விக்'' என்றான்.

வஸந்த், ''எட்டய்யா ஒரு நிமிஷம் சின்ன விஷயத்துக்காகப் போயிட்டு வந்துர்றேன்'' என்றான்.

''நான் இங்கதான் இருக்கேன்'' என்றான் கணேஷ்.

''அதுகூடச் சரிதான். போயிட்டு வாங்க!''

''இனியா, கொஞ்சம் இரு வந்துர்றேன்'' என்று சொல்லிவிட்டு வஸந்த் வெளியே வந்த போது அவன் மூலை திரும்பிக் கொண்டிருந்தான். சதாசிவத்தின் நடையில் ஒரு நிர்மாணமும், குறிக்கோளும் தெரிந்தன. சந்நிதித் தெருவில் தொடர்ந்தான். நாமம் பிரதானமாக வாசலை அலங்கரித்த ஒரு வீட்டை அடைந்து கதவுச் சங்கிலியை ஓசைப்படுத்தித் திறந்ததும் சதாசிவம் உள்ளே சென்றான். (தொடரும்)

வட்டமேஜை

# பார்ப்பானை அய்யரென்ற காலமும் போச்சே!

● தலையங்கம் படித்தவுடன் எனக்கு ஒரு பாடலின் சில அடிகள் ஞாபகத்துக்கு வந்தன: 'எளியோரைத் தாழ்த்தி வலியோரை வாழ்த்தும் உலகே உன் செயல் மாறுதா?

கல்பாக்கம் — சி. பி. ராஜு

● தேச விடுதலைக்கும், நாட்டு மேம்பாட்டுக்கும் அருந்தொண்டாற்றிய பிராம்மண சமூகத்தைக் கருவேப்பிலை போல் பயன்படுத்தி இன்று உதாசீனம் செய்கிறீர்கள். உரிமையைக் கேட்க சங்கம் வைத்துக்கொள்வதையும் கண்டிக்கிறீர்கள். வம்புக்கு வருகிறீர்கள். புண்படப் பேசுகிறீர்கள்.

கண்டாச்சிபுரம் — வெ. பாலகிருஷ்ண ஐயர்

● ஹரிஜனங்களைக் கொளுத்தும்போதெல்லாம் தலையங்கம் எழுதாத நீ இப்போது ஸ்ரீரங்கத்தில் நாலைந்து பார்ப்பான்கள் அடி வாங்கியவுடன் ஒப்பாரி பாடுகிறாயே!

திருச்சி — ஏ. கிரிஸ்தபர்

● ஸடையராகத் தலையங்கம் எழுதியிருப்பீர்கள் என எதிர்பார்த்ததுதான். அதற்காக ஸ்ரீராம ஜெயம் எழுதுவது போல் 'கடவுளை நம்புகிறவன் முட்டாள்' என்று பத்தாயிரம் வால் போஸ்டர் அடித்து பட்டி தொட்டியெங்கும் விநியோகம் செய்தால் நீங்கள் அக்கருத்தை உங்களை அறியாமல் பரப்புவது போல்தானே தோன்றுகிறது!

சென்னை-35 — சி. பூபால் சிங்

● தலையங்கம் முஸ்லிம் லீக் தலைப்பது மனம் தாங்க முடியவில்லை என்பது போல் உள்ளது. பிராமணர்களைத் திராவிடர் கழகத் தொண்டர்கள் தாக்கினால் தாங்கள் முஸ்லிம் லீகர்களின் மனத்தைப் புண்படுத்தலாமா?

கோட்டக்குப்பம் — முகம்மது இப்ராஹிம்

[அந்த எண்ணம் நமக்குச் சிறிதும் இல்லை -ஆர்]

● ''இறையச்சம்'' கொண்டிருக்கும் நாம் எல்லாம் முட்டாள்கள் எனில் ''அவர்களெல்லாம்'' அறிவாளிகளாகவே இருந்து விட்டுப் போகட்டும்!

தங்கநல்லூர் — கா. மு. பாரூக்

● ஸ்ரீரங்கத்தில் தாங்கள் குறிப்பிட்டுள்ள சம்பவம் நடந்ததற்குக் காரணமே பிராமண சமூகத்தைச் சேர்ந்த சில இளைஞர்கள் செய்த முறைகேடான செயல்தான். அவர்கள் சங்கம் வைப்பதை எதிர்க்க இந்தக் கிளர்ச்சி நடைபெறவில்லை. அவர்கள் அநாகரிகமான ஒரு துண்டுப் பிரசுரம் அடித்துவெளியிட்டார்கள். அதை எதிர்த்துத்தான் கிளர்ச்சி நடந்தது.

திருச்சி — எம்.பி. பாலு

● பார்ப்பனர், தமிழர் என்ற பிரிவை ஏற்படுத்த வேண்டும் என்ற நோக்கம் படைத்தவர்களே போஸ்டரை அடித்து ஒட்டி, பரபரப்புக்குள்ளாக்கி இதைப் பார்ப்பான்தான் அடித்துள்ளான் என்ற புரளியையும் திருச்சி முழுதும் பரப்பிவிட்டார்கள்.

திருச்சி — என். எஸ். கே.

● தமிழகத்தில் இரண்டரைக் கோடி வாக்காளர்களில் சுமார் ஒரு கோடி பேர் முந்படுத்தப்பட்ட மக்கள். பலர் முதல்வரது இட ஒதுக்கீட்டினால் கல்லூரியில் இடமும், வேலையும் கிடைக்காமல் அவதியுறுகிறார்கள். அவர்களது துன்பம் வார்த்தைகளால் விவரிக்க முடியாது. தகுதி, திறமை இருந்தும் முற்படுத்தப்பட்டவன் என்ற ஒரே காரணத்துக்காக எல்லா நிலையிலும் அவன் புறக்கணிக்கப்படுகிறான்.

மேற்கு மாம்பலம் — சு. இராமசாமி

● சுஜாதா கதைக்கு நாடார் சமூகம் எதிர்ப்புத் தெரிவிக்கலாம். சாவித்திரி படத்துக்கு பிராமண சமூகம் எதிர்ப்புக் காட்டக்கூடாதா என்று கேட்கிறீர்கள். நாடார் சமூகத்தின் முறையற்ற செயலை நியாயப்படுத்துகிறீர்கள். அடுத்து அதே தவறை பிராமண சமூகம் ஏன் செய்யக் கூடாது என்று கேட்டு, முறையற்ற இரண்டு செயல்களுக்கும் ஆதரவு தேடி இருக்கிறீர்கள்.

சிதம்பரம் — சிவ. ராஜகுமார்

● சாதிகளே கூடாது என்பதை நீங்கள் ஏற்றுக் கொள்வீர்களானால் சாதிகளின் பெயரில் அமைப்புகள் தோன்றுவதை ஆதரிக்கக் கூடாது. 'நாடார் சங்கம் இருக்கிறது. ஆகவே பிராமணர் சங்கம் தேவை' என சாதிகள் நிலைக்க வேண்டும் என்று கருதுவோர்தான் கூற முடியும்.

சென்னை-61 — வி.ஜி. நேசன்

[மூடநம்பிக்கைகள் ஒழிய வேண்டும், சாதி மத வேறுபாடுகள் கூடாது என்பதில் அபிப்பிராய பேதமே இல்லை. அந்த அளவில் நாம் பெரியார் கட்சிதான். ஆனால் பல்வேறு ஜாதி மதத்தவரும் தத்தம் முன்னேற்றத்துக்குச் சங்கம் அமைத்து உழைக்கும்போது அதை எதிர்க்காதவர்கள் பிராமணர் சங்கம் அமைத்தால் மட்டும் ஆத்திரமடைவானேன் என்பதுதான் கேள்வி. பிறப்பினால் பிராமணன் உயர்ந்தவன் என்ற காலம் என்றோ மலையேறிவிட்டது. பிறப்பினால் பிராமணனைத் தாழ்ந்தவனாக்கி விடாதீர்கள், துவேஷத்தை வளர்க்காதீர்கள், அவனையும் சகோதரனாய் நடத்துங்கள் என்பது தான் இன்றைய கோரிக்கை. முற்படுத்தப்பட்டவர் என்று முத்திரையிட்டு பிராமணர்க்கு மட்டுமின்றி வேறு கோடிக்கணக்காளருக்கும் நாடெங்கும் இன்று சம உரிமைகள் மறுக்கப்படுகின்றன. ஜாதியில்லையென்று கூறிக்கொண்டே சுதந்திரம் பெற்று 33 ஆண்டுகளுக்குப் பிறகும் சலுகைகளை ஜாதி அடிப்படையில் வழங்குவானேன், பொருளாதார அடிப்படையில் தரலாமே என்பது தான் வேண்டுகோள். -ஆர்]

# அரிப்பும் எரிச்சலும் தரும் வியர்க்குருத் தொல்லையிலிருந்து விடுதலை பெறுவீர்!

நைஸில்
உபயோகிப்பீர்-
மிகத்துரித நிவாரணம்
அளிக்கும்
வியர்க்குரு
பவுடர்.




2
பேக்குகளில்—
'ப்ளூ' மற்றும்
'ஸாண்டல்வுட்'

வாங்குவீர் நைஸில்.
விரட்டுவீர்
வியர்க்குருவை.
பால்கம் பவுடரைவிட
குறைந்த விலையில்!

மருந்துக் கலவை
யுள்ள நைஸில்:

1. அதிக வியர்வை
யைத் தவிர்க்கிறது.
2. வியர்வையை
உறிஞ்சுகிறது.
3. துர்நாற்றம் ஏற்
படுத்தும் கிருமி
களை அழிக்கிறது.
4. சருமத்திற்கு இத
மளிக்கிறது.




## 15. வாதையுற்ற வடக்கு

லால்பகதூர் அமைச்சரவையில் செய்தி விளம்பரத் துறை அமைச்சராக இருந்தவர், சர் சி. பி. ராமசாமி ஐயரின் குமாரர் திரு சி. ஆர். பட்டாபிராமன் அவர்கள், பாகிஸ்தான் யுத்தத்தில் இந்தியா வெற்றி பெற்றவுடன் இந்தியப் படை வீரர்களுக்கு உற்சாகம் ஊட்டத் தென்னாட்டுக் கலைஞர்கள் குழு ஒன்று செல்ல வேண்டும் என்று அவர் தமிழ்நாடு காங்கிரசைக் கேட்டுக் கொண்டார்.

அப்போது தென்னிந்திய திரைப்பட வர்த்தக சபைத் தலைவராக இருந்த அவனது சகோதரர் திரு ஏ. எல். சீனிவாசனுக்கும் இந்த வேண்டுகோளை விடுத்தார்.

தலைவர் காமராஜர் அவனைக் கூப்பிட்டு ஏற்பாடு செய்யும்படி கேட்டுக் கொண்டார்.

அவனுக்கு இரட்டை மகிழ்ச்சி.

யுத்தம் நடந்து கொண்டிருந்தபோதே, அவனும், திரு சின்ன அண்ணாமலையும் ஒரு லாரியில் ஏறி நின்று இந்தியப் படை வீரர்களுக்காக ஏராளமான துணி மணிகளையும் பாத்திரங்களையும் சேகரித்திருந்தார்கள். அவற்றின் மதிப்பு சுமார் ஒரு லட்சம் ரூபாய் இருக்கும்.

அந்தப் பொருட்களைப் பெரியார் திடலில் விழா—வைத்து முதல்வர் பக்தவத்சலத்திடம் அவன் ஒப்படைத்திருந்தான்.

அடடா! நெருக்கடி என்று வரும்போது தானே தமிழ் மக்களின் தேச பக்தி பொங்கிப் பீறிட்டு வெளியில் வருகிறது!

எத்தனை தேச விரோதிகள் மேடைபோட்டு அவர்கள் மனத்தைப் பாழ்படுத்தியிருந்த போதிலும், சீனப் போரின் போதும், பாகிஸ்தான் போரின் போதும் அவர்கள் கண்களில் கனல் கொப்பளிக்க அல்லவா நின்றார்கள்!

ஏன், அவனது உடம்பிலும் தேச பக்தி நெருப்பல்லவா பொங்கி எழுந்தது!

சீனப் போர் காலத்தில் தென்னிந்திய திரைப்பட வர்த்தக சபையில் பணம் வசூல் செய்யப்பட்டபோது, அவன் தனது பத்துப் பவுன் கடிகாரச் சங்கிலியையும், ஏழாயிரம் ரூபாய் ரொக்கத்தையும் அல்லவா கொடுத்தான்!

பாகிஸ்தான் யுத்தத்தின்போது ஆயிரம் ரூபாய் பட்டுப் புடவையைக் கூட அலட்சியமாகத் தூக்கிக் கொடுத்த கடைக்காரர்களை எப்படி மறக்க முடியும்?

''வந்துவிளை யாடவந்த
வஞ்சகரை நம்படைகள்
பந்துவிளை யாடுதல்போல்
பாய்ந்து விளை யாடுதம்மா''

—என்று அவன் கவிதை எழுதியிருந்தான் அந்தப் படை வீரர்களுக்கு உற்சாகம் ஊட்ட.

நடிக நடிகையர் போக வேண்டும் என்ற உடனே, அவன் சிறந்த நடிகர்கள் யாரையும் பாக்கிவிடவில்லை.

சிவாஜி கணேசன், சந்திரபாபு, பத்மினி, ராஜசுலோசனா, ஜெயலலிதா, சாவித்திரி, தேவிகா, அம்பிகா, விஸ்வநாதன்—ராமமூர்த்தியோடு அவரது குழுவினர், அவன், சின்ன அண்ணாமலை ஆகியோர், ஏ.எல். எஸ். தலைமையில் புறப்படத் தயாரானார்கள்.

எல்லோரும் முதலில் டெல்லி சென்று அங்கிருந்தே இரண்டு விமானப் படை விமானங்களில் விமான தளங்களுக்குச் செல்ல வேண்டும்.

டெல்லி வரை மட்டும் சொந்தச் செலவு. மற்றவை அரசாங்கச் செலவு. சின்ன அண்ணாமலையையும், அவனது டிரைவர் பாபு ராவையும் அவன் தன் சொந்தச் செலவில் அழைத்துச் சென்றான்.

அது ஒரு அற்புதமான பயணம்.

பஞ்சாப் பகுதியில் உள்ள ஆதம்பூர், அல்வாரா, ஜலந்தர், ஆகிய பல விமானத் தளங்களுக்கு அவர்களது விமானங்கள் பறந்தன.

விசுவநாதன் — ராமமூர்த்தி குழுவினர் சுமார் இருபது பேருக்குத் தனி விமானம். இரண்டு விமானங்களும் பக்கம் பக்கமாக ஒன்றின் இறக்கையை ஒன்று தொட்டுக் கொண்டு போன காட்சி அற்புதமாக இருந்தது.

ஆதம்பூர் விமானப் படைத் தளத்தில் தங்குவதற்கு நல்ல நல்ல குடியிருப்புக்களை அவர்களுக்குக் கொடுத்திருந்தார்கள். உலகிலேயேஅமெரிக்க விமானப்படைக்கு அடுத்தபடியான வசதிவா நமது விமானப் படைக்குத்தான் தரப்பட்டிருக்கிறதோ என்று எண்ணும்படி அவ்வளவு வசதிகள். குவியல் குவியலாக முட்டைகள், இறைச்சிகள், மீன்கள்.

நமது நடிகர்கள் அது போன்ற வசதிகளை எந்த ஐந்து நட்சத்திர ஹோட்டல்களிலும் பார்த்ததில்லை என்றார்கள்.

வாழ்வும் சாவும் வந்து வந்துதான் போகின்றன. ஆனால் ஒரு இந்தியன் நன்றாக வாழ்ந்து சாக வேண்டும் என்றால் அவன் நமது விமானப் படையில் சேர வேண்டும்.

விமானப் படை அதிகாரிகள் பலர் தென்னிந்தியர்களாக இருப்பதை அவன் கண்டான். ஒரு விமானப் படை அதிகாரியின் மனைவியான பிராமண மாமிதான் படைத் தளங்களில் அவர்களோடு சுற்றுப் பயணம் நடத்தினார்.

விமானத் தளத்தில் விமானம் ஓடுகின்ற பாதைகள் ஏராளம். ஒவ்வொரு பாதையின் இரண்டு ஓரங்களிலும் ஆறடி உயரத்திற்கு மேல் வளர்ந்திருந்த நாணல்கள், சுற்றிலும் மரங்கள். மேலே இருந்து பார்ப்பவர்களுக்கு நமது படை. விமானங்கள் எங்கே இருக்கின்றன என்று தெரியாதபடி பாதுகாப்புகள்!

விமானத் தளத்தில் காற்று 'விர்'ரென்று அடித்தது. மாலை நான்கு மணிக்கு அதில் நடந்து செல்வதே அவ்வளவு உற்சாகமாக இருந்தது.

நமது படை வீரர்கள் நன்றாகக் கவனித்தார்கள். தங்கள் விடுதியில் வகை வகையான மதுபானங்களைக் கொடுத்தார்கள்.

அல்வாரா தளத்தில், எட்டு மணிக்கு நாட்டியம் ஆரம்பமாயிற்று. அதிகாரிகள் நமது நடிகைகளோடு நாட்டியமாடினார்கள். நடிகர் சந்திர பாபு, அதிகாரிகளின் குடும்பத்தினரோடு நாட்டியமாடினார்.

இதில் பயந்துகொண்டு ஒரு மூலையிற் போய் உட்கார்ந்தவர், அப்போது மிகவுட சிறு வயதாக இருந்த ஜெய லலிதாதான்.

எல்லோரையும் பத்திரமாகக் கொண்டு சேர்க்க வேண்டிய பொறுப்பு ஏ.—எல். எஸ். ஸுக்கு இருந்தது.

இரவு பன்னிரண்டு மணி வரையில் நாட்டியம். ஒரே உற்சாகம்.

திடீரென்று ஏ. எல். எஸ். விசுவநாதனுக்குக் கையைக் காட்டினார். விசுவநாதனும் 'ஜனகனமண' வாசிக்க ஆரம்பித்தார்.

எவ்வளவோ ஆர்வத்தோடு ஆடிக்கொண்டிருந்த அதிகாரிகள் தேசிய கீதத்தைக் கேட்டதும் சிலைபோல் அசையாமல் நின்றார்கள்.

தேசிய கீதம் முடிந்ததும் ஓர் அதிகாரிக்குச் செல்லக் கோபம் வந்தது. "இனி நாங்கள், உங்களை எப்போது சந்திக்கப் போகிறோம்? விடியும்வரை வாசிக்கக் கூடாதா?" என்று விசுவநாதனிடம் கேட்டார். "மணி பன்னிரண்டாகி விட்டதே" என்றார் விசுவநாதன். "சரி மறுநாள் பொழுது வந்து விட்டது. மீண்டும் வாசியுங்கள்" என்றார், அவர். பிறகு மேலும் அரை மணி நேரம் வாசித்து முடித்தார்கள்.

நமது நடிகைகளில் அதிகாரிகளுக்கு ஈடு கொடுத்து ஆடியவர் பத்மினி. ஆடத் தெரியாமல் விழித்தவர் தேவிகா.

இரவு இரண்டு மணிக்கு எல்லோரும் படுத்த பிறகுதான் அவன் சாப்பிட்டான்.

அவனும் அவனது டிரைவர் பாபு ராவும் விமான தளத்தின் ஓடு பாதையில் வந்தபோது அவன் அப்படியே அந்தப் பாதையைத் தொட்டு வணங்கி, உச்ச ஸ்தாயியில் பாட ஆரம்பித்தான்.

அங்கே ஒரு பதுங்கும் குழியைக் காட்டியிருந்தார்கள். பாகிஸ்தான் விமானங்கள் வந்தபோது அந்தக் குழியில் ஆறு வீரர்கள் பதுங்கியிருந்தார்களாம். பக்கத்தில் விழுந்த குண்டினால் குழி மண் மூடப்பட்டு ஆறுபேரும் உயிர் நீத்தார்களாம். அந்த இடத்தையும் அவன் தொட்டு வணங்கினான்.

காலையில் குளித்துவிட்டு எல்லோரும் விமானத் தளத்தைச் சுற்றிப் பார்த்தார்கள்.

அங்கே ஒரு 'நாட்' விமானத்தின் அருகில் 'கீலர்' என்ற புகழ் பெற்ற விமானியைக் கண்டார்கள். அந்தக் கீலரும், அவரது சகோதரரும் யுத்த காலத்தில் மிகவும் புகழ் பெற்றவர்கள். சகோதரர் வேறொரு தளத்துக்குப் போயிருந்ததால் கீலர் மட்டும் இருந்தார்.

பாகிஸ்தான் விமானங்களைத் தொடர்ந்து சென்று குருவிகளைச் சுடுவது போல் சுட்டவரல்லவா, அவர்!

அவரைப் பற்றி ஒரு கதையைச் சொன்னார்கள்.

பாகிஸ்தான் விமானம் ஒன்று மேலே பறந்ததாம். அதைக் கீழே இறங்கும்படி நமது அதிகாரிகள் ரேடியோவில் கட்டளையிட்டார்களாம். அந்த விமானியோ இரண்டு குண்டுகளைப் போட்டுவிட்டு "How do you like it" என்று கேட்டானும். உடனே கீலர் பறந்து

※ ஏ. எல். சீனிவாசன்





"நீங்க இவ்வளவு தீவிரமா அரசியல்லே நுழைஞ்சது என்ன காரணம்...?"

"வேறு எந்தத் தொழில்லேயும் என்னாலே முன்னுக்கு வர முடியல்லேங்கறதுதான்...!"

- ஸ்ரீ. சுப்பாராஜ்

சென்று லாகூர் எல்லை வரையிலே விமானத்தைத் துரத்தித் திருப்பிக் கொண்டு வந்து கீழே இறக்கி அதே கேள்வியைத் திருப்பிக் கேட்டாராம்.

அத்தகைய வீரன் கிலர். மிகுந்த கூச்சத்துடன் நின்றார். நம்முடைய நடிகைகள் அவரோடு நின்று படம் எடுத்துக்கொண்டபோது, அவருக்கு வெட்கம் தாங்கவில்லை.

அல்வாராவில்தான் சந்திரபாபு சூரியோதயத்தையே பார்த்தார். அதுவரையிலும் பார்த்ததில்லையாம்!

அல்வாராவிலிருந்து ஜலந்தருக்கு ஸ்பெஷல் பஸ் பிரயாணம். அழகான பஸ்ஸை அந்த மாமி கொண்டு வந்திருந்தார்.

பின்னணிப் பாடகர்கள் பி.பி.எஸ்., பி. சுசிலா, எல். ஆர். ஈஸ்வரி ஆகியோரும் வந்திருந்ததைக் குறிப்பிட மறந்து விட்டேன்.

எல்லோரும் பஸ்ஸில் ஏறிக் கொண்டனர்.

பிரிவினையால் பெரிதும் பாதிக்கப்பட்ட மாநிலங்கள் பஞ்சாப்பும், வங்காளமும். இந்த இரண்டு மாநிலங்களையும் பார்க்கும் ஒருவன் கனவில்கூடப் பிரிவினை கருத மாட்டான்.

தங்கள் சகோதரர்கள் லாகூர் பகுதியில் பட்ட அவமானங்களை எண்ணி ஒவ்வொரு பஞ்சாபியும் வேங்கை போல் சினந்து நின்றான்.

தென்னிந்தியக் கலைக் குழுவினருக்கு அவர்கள் அளித்த ஆரவாரமான வரவேற்பு, கொஞ்சநஞ்சமல்ல.

ஜலந்தர் போகும் வழியில் அவன் சாலைகளையே கூர்ந்து கவனித்தான்.

"ஓ! பாஞ்சாலமே!, என் இனிய பாஞ்சாலமே! தேச விடுதலைப் போரின் போது தியாகச் செம்மல்களை அதிகம் கொடுத்த வீரப் பாஞ்சாலமே! உன் திருமண்ணைத் தொட்டு வணங்குவதே இந்த நாட்டுக் குடிமகனின் வேலை."

அவனுக்கு என்னென்னமோ பாட வேண்டும்போல் தோன்றிற்று. ஒவ்வொரு பஞ்சாபியையும் கட்டித் தழுவத் தோன்றிற்று.

ஜலந்தர் ராணுவ ஆஸ்பத்திரிக்குள் நுழைந்ததும், 'நான் ஓர் இந்தியன்' என்ற பெருமிதம் ஏற்பட்டது. கை போனவர்கள், கால் போனவர்கள், கண் போனவர்கள், படுக்கையில் உற்சாகம் குன்றாமல் காட்சியளித்தார்கள். ஒவ்வொருவரும் தங்களுக்குப் பிரியமான நடிகைகளைப் பற்றிக் கேட்டனர்.

ஆஸ்பத்திரி மைதானத்திலேயே பொதுக் கூட்டம். அவர்கள் தமிழில் பேசினார்கள். யாருக்கும் அது புரியவில்லை.

இந்தி தெரியாத குறையை ஜலந்தரில் அவர்கள் மிகவும் உணர்ந்தார்கள்.

ஜலந்தர் நகரின் மைதானத்தில் அன்று மாலை அவர்களது கலை நிகழ்ச்சி.

எங்கும் ஒரே தாடிக்கார சீக்கியர்கள் குவிந்து கிடந்தார்கள். அவ்வளவு ராணுவத்தினரின் குடும்பத்தினரும் வந்திருந்தனர்.

இசை நிகழ்ச்சி ஆரம்பமானதும் திருமதி பி. சுசிலா, 'சரவணப் பொய்கையில் நீராடி' என்ற பாடலைப் பாட ஆரம்பித்தார். பஞ்சாபியரெல்லாம் கைதட்டி அவரை உட்கார வைத்து விட்டார்கள். யாருடைய தமிழ்ப் பாட்டையும் அவர்கள் கேட்க விரும்பவில்லை!

பஞ்சாபியரிடையே செல்கிறோமே தமிழ் பேச்சும் பாட்டும் எடுபடுமா என்று சிந்திக்கிற பண்பாடு எங்களிடம் இல்லாது போயிற்று.

தமிழ் நாட்டிலிருந்து வருகிறார்களே, புரியாவிடினும் அவர்கள் கலைகளை ரசித்து மகிழ முயல்வோம் என்ற பண்பாடு அவர்களிடம் இல்லாது போயிற்று.

பிறகு எம். என். ராஜத்தின் கணவர் ராகவன் ஒரு ஆங்கிலப் பாட்டுப் பாடினார். சபை கொஞ்சம் அமைதியாக இருந்தது. சந்திர பாபு ஆங்கிலத்தில் விடுத்த வேண்டுகோள் பலித்தது.

பிறகு பத்மினியும் அம்பிகாவும் ஆடிய 'பங்காரா' நடனத்துக்கு ஒரே ஆரவார வரவேற்பு. அதையே திரும்பத் திரும்ப ஆடி, நிகழ்ச்சிகளை முடித்துக் கொண்டோம்.

அந்த ஆறு நாட்களும் அற்புதமான நாட்கள். ஒவ்வொரு படைத் தளத்திலும் தமிழ் வீரர்களைக் கூட்டம் கூட்டமாகச் சந்தித்தோம்.

அவன் பயந்தது போல் படை வீரர்களிடம் தி. மு. க. செல்வாக்கு அதிகமில்லை. அதிலும் சீன, பாகிஸ்தான் யுத்தங்களுக்குப் பிறகு தேசிய உணர்வே மேலோங்கி நின்றது.

புதுடெல்லி வந்து சேர்ந்தபோது விமானத் தளத்தில் ஏராளமான தமிழ்ப் படை வீரர்களை அவர்களை வரவேற்றார்கள். எல்லோரும் எல்லோரோடும் புகைப் படம் எடுத்துக் கொண்டார்கள்.

அந்த வீரர்களிடையே நடிகர்களை விட, அவனுக்குத்தான் செல்வாக்கு அதிகம் இருந்தது. பலரும் அவனுடைய கவிதைகளை ஒப்புவித்தார்கள்.

இரவு அசோகா ஹோட்டலில் தங்கல். அரசாங்கம் ஓரளவுதான் அதற்குப் பணம் கொடுத்தது. கூடுதல் தொகையை அவரவரும் செலுத்தினார்கள்.

அனைவரிலும் அவன் செலுத்திய தொகையே அதிகம். காரணம், பலபேரும் அவனுடையஅறையிலேயே சாப்பிட்டுவிட்டுப் போய்விட்டார்கள்.

மறுநாள் ஜனாதிபதியைச் சந்திக்க ஏ.எல். எஸ். தலைமையில் ஒரு குழு புறப்பட்டது. அங்கே ஒரு வேடிக்கை நடந்தது. (வளரும்)

‘‘இது வெறும் நட்புதான். ஜஸ்ட் எ கம்பானியன்ஷிப். நான் உன்னைக் கல்யாணம் செய்துகொள்ள முடியாது — எந்தக் காரணம் கொண்டும்!’’ என்றான் விட்டல்.

வசந்திக்கு இதைக் கேட்டு அதிர்ச்சியோ, பயமோ உண்டாகவில்லை. மெல்லிய புன்னகை யொன்று அவள் இதழ்களில் மலர, ‘‘அதனால் என்ன! எனக்கும் இந்த உறுதி பிடித்துத்தான் இருக்கிறது. நாம் நிச்சயம் நண்பர்களாகவே இருக்கலாம்!’’ என்றாள்.

‘‘கல்யாணம் பண்ணிக் கொள்கிறீர்களா என்று ஒரு நாளும் என்னைக் கேட்கக் கூடாது. என் லட்சியம் கல்யாணம் செய்து கொள்ளாமலே இருப்பதுதான்.’’

‘‘என்னுடைய லட்சியமும் அதுதான் என்றால் உங்களுக்கு அதிர்ச்சியாய் இருக்குமா, ஆச்சரியமாய் இருக்குமா?’’ என்றாள் வசந்தி சிரித்துக் கொண்டே.

‘‘மகிழ்ச்சியா யிருக்கும்’’ என்றான் விட்டல், சற்று யோசித்துவிட்டு. ‘‘இரண்டு ஆண்கள் நட்புடன் பழகுவது போல் நாமும் ஏன் பழக முடியாது? ஐ வாண்ட் டு ட்ரை.’’

‘‘அன்ட் ஸக்ஸீட் இஃப் பாஸிபிள்’’ என்று முடித்தாள் வசந்தி.

டிரைவ்-இன் ரெஸ்டாரண்டின் ஓரமான பகுதியில், மத்தியான வேளையில், வெயில் பொரிக்கிற அந்த அரைச் சனிக்கிழமைப் பகலில், எதிர் நாற்காலியில் அமர்ந்திருந்த வசந்தியைப் பார்த்துச் சிரித்தான் விட்டல்.

‘‘என்னுடைய விநோதமான லட்சியத்துக்கு ஏற்ற அபூர்வமான பெண்ணாக இருக்கிறாய் நீ!’’

‘‘ஏன், இதுவரை யாரிடமாவது இப்படிப் பழகி, தோல்வி கண்டது உண்டா?’’ என்று கேட்டாள் வசந்தி மெல்ல.

‘‘ஆமாம். ஆனால் என் லட்சியம் இதுதான் என்று சொன்னதும் மறு நிமிஷமே முகத்தைத் திருப்பிக் கொண்டு போய்விட்டார்கள். ஒருத்தி லீலா. இன்னொருத்தி ஜானகி. ஆனால் நான் அவர்களைப் பாராட்டுகிறேன். உங்கள் மனசை மாற்றிக் காட்டுகிறேன் என்று சவால் விடவில்லை. மயக்க முயலவில்லை.’’

வெய்ட்டர் வந்து ‘பில்’லை வைத்ததும் வசந்தி பணம் கொடுக்கப் போனாள். ‘‘நோ. என் எதிரில் என் நண்பர் பர்ஸைத் திறப்பதை எப்போதும் அனுமதிக்க முடியாது!’’ என்றான் விட்டல்.

‘‘ஓகே!’’ என்றாள் வசந்தி.

வாழ்க்கையில் இரு நபர் எந்த அளவுக்கு மன ஓட்டத்தில், விருப்பு வெறுப்புக்களில் ஒத்துப் போகக் கூடும்? விட்டல்—வசந்தி அளவுக்கு என்றால், அது கிட்டத்தட்ட நூறு பர்செண்ட் சரி.

அவனுக்கு சத்யஜித்ராய் படங்களும், சிதார் இசையும், வயலின் கச்சேரிகளும் அலுக்காதவை. இவை நகரின் எந்த மூலை முடுக்கில் இருந்தாலும், விட்டலின் கரங்களில் அதற்கான டிக்கெட் காணப்படும். வசந்தியும் அப்படியே.

‘‘ஏற்கனவே போட்டுவிட்ட இருப்புப் பாதையில் ஓடுகிற ரயில் தொடராக இருக்கக் கூடாது மனித வாழ்க்கை என்பதில் நான் தீவிரமாக இருப்பவன். அதன் எதேச்சையான நெளிவு சுளிவுகளில், திருப்பங்களில், ஆச்சரியங்களில் ஒரு பிரமிப்பு உண்டாகும் பார். அதை அனுபவிப்பதிலும் எதிர்பார்ப்பதிலும்தான் வாழ்க்கையின் சுவையே இருக்கிறது. நீ என்ன சொல்கிறாய் வசந்தி?’’

‘‘உண்மைதான். எதிர்பார்த்தலில் இருக்கிற துடிதுடிப்பு ருட்டீன் வாழ்க்கையில் இருக்காது!’’

‘‘நாம் இருவரும் பல விஷயங்களில் ஒத்துப் போகிறோம். எனக்கு ஆச்சரியமாயிருக்கிறது!’’





## துணுக்கு வேட்டை

விவசாயக் குடும்பத்தைச் சேர்ந்த இளைஞர் சாகுல் அமீது. இந்த இதழில் இடம் பெறும் துணுக்குகளைத் தேர்ந்தெடுத்துத் தந்துள்ளார். விவசாயத்தையே பாடமாக எடுத்துத் தேர்ச்சி பெற்றது, தமக்கு மிகவும் உதவியாக உள்ளது என்று சொன்னாலும், இவர் தற்போது கட்டடக் காண்டிராக்ட் தொழிலில்தான் ஈடு பட்டிருக்கிறார்.

"எங்கள் பகுதி மிகவும் பின்தங்கியது. கட்டட வேலை செய்வதில் அனுபவமுள்ள தொழிலாளர்கள் நிறையப்பேர் உள்ள இடம். அவர்களுக்கு வேலை வாய்ப்புத் தர இந்தத் தொழில் நன்கு பயன்படுகிறது." என்று கூறும் சாகுல் அமீது குறிப்பிடும் வட்டாரம் புதுக்கோட்டை மாவட்டம் திருமயம் தான். இவரிடம் அறுபது குடும்பங்கள் பிழைத்து வருகின்றனவாம். திருமயம் பூப்பந்தாட்டக் கழகத் துணைத் தலைவர், புதுக்கோட்டை மாவட்டக் கைப்பந்துக் கழகத்தின் செயற்குழு உறுப்பினர் இவர்.

அமைப்பு 'யெஸ்பால்'

போட்டோ: வி: என். ஆர். பாபு

''பல விஷயங்களிலா? எல்லா விஷயங்களிலுமே இல்லையா?''

''எத்தனை உண்மை நீ சொல்வது! யெஸ், எல்லா விஷயங்களிலும் நாம் ஒன்றாகவே இருக்கிறோம்!''

அன்று விலாயத்கானின் சிதார் கச்சேரியில் மிஸ்ர பீலுவை மெல்லிய விளக்கொளியில், அடுத்தடுத்த நாற்காலிகளில் அமர்ந்து கேட்டுக் கொண்டிருந்தபோது கூட, இருவருடைய உடலும் ஒரு முறை கூடத் தொட்டுக் கொள்ளவில்லை. இதுவரை இருவர் உடலும் சிறிதும் ஸ்பரிசித்தது கிடையாது என்பதை அந்த நிகழ்ச்சியும் நிரூபித்தது.

படம் பார்க்கும்பொழுதும், தம்மை மறந்தோ, அறிந்தோ அறியாமலோ அல்லது வேண்டுமென்றே கூடவோ, இருவர் உடலும் சிறிதும் உரசிக் கொண்டதில்லை. ''இது ப்யூர் கம்பானியன்ஷிப். நோ ரூம் ஃபார் ஸெக்ஸ்!'' என்று விட்டல்தான் ஆரம்பத்திலேயே வெளிப்படையாகச் சொல்லியிருக்கிறானே....

ஹோட்டலில் டிபன் சாப்பிட்டுவிட்டு, கையைத் துடைத்துக் கொள்ளப் பாக்கெட்டில் இடது கையை விட்டபோதுதான் கர்சீப் கொண்டு வராதது தெரிந்தது விட்டலுக்கு.

''இதோ பிடியுங்கள்!'' என்று தன் கைக்குட்டையை வசந்தி கொடுக்கவும், ஒரு நொடி தயக்கத்துக்குப் பிறகு அதை வாங்கிக்கொண்டான் விட்டல். ஆரஞ்சு வர்ணத்தில் பூப் போட்ட மெல்லிய வெள்ளைக் கைக்குட்டை. சலவை மடிப்புக்கூடக் கலையாதது. உள்ளே பவுடரோடு வைத்திருந்ததால் வாசனையாக இருந்தது. அந்தக் கைக்குட்டையே ஒரு பெண் வடிவம் பூண்ட மாதிரியும், அதை ஸ்பரிசிக்கும்போது வசந்தியின் மெல்லிய பூங்கரங்களை வருடுவது போலவும் திடீரென்று ஒரு நினைப்பு விட்டலுக்கு. 'சே, என்ன அற்பத்தனமான கற்பனை!' என்று நினைத்துக் கொண்டான். அந்தக் கைக்குட்டையை உண்மையில் அவளிடம் திருப்பிக் கொடுக்க அவனுக்கு மனமில்லை. ஆனாலும், அப்படிக் கொடுக்காமலிருந்தால் அவள் அபிப்பிராயத்தில் தான் எத்தனை அடி தூரம் கீழே விழுந்து விடுவோம் என்று தோன்றவே, ''தாங்க் யூ'' என்று திருப்பிக் கொடுத்தான்.

இதற்குப் பிறகு ஒரு நாள் இருவரும் ஒரே பஸ்ஸில் ஒரே திசையில் செல்ல நேர்ந்தது. காலியாக இருந்த சீட்டில் இருவரும் சேர்ந்தாற்போல் அமர்ந்து கொண்டபோது, வசந்தியின் நெருக்கம் விட்டலுக்குக் குறுகுறுப்பை உண்டுபண்ணிற்று முதலில். ஏற்கனவே உடலோடு உடல் உரசிக் கொண்டிருக்க, ஆட்டோமாடிக் சிக்னல் அருகே பஸ்ஸை வளைத்துத் திருப்பியபோது, எதிர்பாராத அந்தத் திருப்பத்தில் விட்டல் ஏறக்குறைய அவள் மீது சாய்ந்துவிட்டான். அவள் புன்னகையோடு அவனைப் பார்த்தாலும், விட்டலின் உடம்புக்குள் உண்டான படபடப்பு அடங்கச் சிறிது நேரமாயிற்று. 'வாட்ஸ் ஹாப்பனிங் டு மீ!' என்று நினைத்துக் கொண்டான். அந்த நினைப்பை உடனே உதறிவிட்டு அவளுடன் பாந்தியன் ரோடில் இறங்கும்பொழுது, சலனம் ஏதுமின்றி, ''பை... குட் நைட் வசந்தி!'' என்றான்.

அவளும் அப்படிச் சொல்லிவிட்டு நகர்ந்தபோது, சிரித்துக் கொண்டே நடக்கத் தொடங்கிய விட்டல் ஏனோ திடீரென்று அவள் போவதையே கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தான். அவள் உருவம் பார்வையிலிருந்து மறையும்வரை கூட அல்ல. பார்வை தாண்டிய பிறகும்கூட, அவள் அவன் எதிரே நடந்து கொண்டே இருப்பது மாதிரிதான் விட்டலுக்குத் தோன்றிற்று. அவள் திரும்பிப் பார்த்திருந்தால் நிச்சயம் அவன் நின்றுவிட்டதையும், தன்னையே

இமைக்காமல் பார்த்துக் கொண்டிருப் பதை யும் உணர்ந்திருக்கக் கூடும்....

இரு தினங்களுக்குப் பிறகு ஒரு நாள் மாலை, அவனை ரெஸ்டாரண்டில் சந்தித்த போது, ஏர்கண்டிஷன்ட் அறையிலும் விட்ட லுக்கு வியர்த்துக் கொட்டிற்று. வெய்ட்டர் அவர்களிடம் வருமுன், ''வசந்தி, நான் உன்னை விரும்புகிறேன். ஐ இன்லட் லவ் யு!'' என்றான் விட்டல். அவனுள் படபடப்பு இன்னும் அடங்கவில்லை.

வசந்தி அவனைப் புன்னகையுடன் பார்த்தாள்.

''நாம் பல விஷயங்களில் ஒத்த மனத உடையவர்களாக இருக்கிறோம். நம் நட்பு நிரந்தரமாக இருக்கச் சிறந்த வழி, வாழ்க்கையிலும் நாம் இணைவதுதான் என்று தோன்றுகிறது. நான் உன்னைக் கல்யாணம் செய்துகொள்ள விரும்புகிறேன் வசந்தி!'' என்றான் விட்டல்.

மௌனம் ஒரு கனமான திரையாக இருந்த ஒரு நொடிக்குப் பிறகு, ''நாம் முதலில் சந்தித்தபோது நீங்கள் சொன்னது நினைவு இருக்கிறதா? 'நான் கல்யாணம் பண்ணிக் கொள்ள முடியாது – எந்தக் காரணம் கொண்டும்' என்றது ஞாபகமில்லை? நீங்கள் இப்போது மாறிவிட்டீர்கள். ஆனால் நான் அதில் வெகு உறுதியாக, தீவிரமாக இருக்கிறேன். உங்கள் மனசில் எப்போது என்னை மனைவியாகப் பார்க்க வேண்டும் என்ற எண்ணம் முளைத்து விட்டதோ, அப்போது நான் என்னைக் காத்துக் கொள்ள வேண்டும். ஸோ, மிஸ்டர் விட்டல்! நம் நட்பு இத்தோடு, இன்றோடு முடிகிறது. தாங்க்ஸ் ஃபார் யுவர் கம்பானியன்ஷிப்!'' என்றாள் வசந்தி.

விட்டல் பார்த்துக்கொண்டே யிருக்க, வெயிட்டர் வருமுன் வசந்தி ஹோட்டல் வாயிலைக் கடந்து கொண்டிருந்தாள்.

ஒரு பெண்ணின் வாழ்க்கையில் உண்டாகும் திருப்பங்களைச் சொல்கிறார்கள். கடைசிவரை உட்கார வைத்து விடுகிறார்கள். குருக்களாத்துப் பெண் படாபட் பெண் பார்க்க வருகையில் செருப்புடன் வந்து நமஸ்கரிக்கலாமோ? ஒய். ஜி. பி. மாமா ''அந்த பீரோவைத் திற அதை எடுத்துக்கோ. இந்த பீரோவைத் திற இத எடுத்துக்கோ'' என்று நம்மை என்னென்னமோ நினைக்க வைத்துக் கடைசியில் ஏமாற்றி விட்டார். படாபட்டால் படம் பிழைக்கிறது. காதலன் கம் நக்ஸலைட் கருணாகரன் (சேகர்) குழப்பமான காரக்டர். படாபட்டுக்குத் தம்பி மாதிரி இருக்கு. (தாடி வைத்தும் கூட) எம். ஆர். ஆர். வாசுவின் பைல் கலாட்டா பரவாயில்லை. மிகவும் சூடான ஜெயமாலினி. ஒருவர் (குருக்கள்) தெருவில் மயங்கி விழ உடனே எல்லோரும் ஓடிவந்து உதவுகிறார்களாம். அதுவும் சென்னையில். ஆச்சரியம். இரவில் புறப்பட்டு வந்துகொண்டிருக்கும் ரயிலைக் கவிழ்க்க, பகலில் சதி வேலை நடக்கிறது. கேமரா குட் அண்ட் பேட். கதை கொஞ்சம் இயற்கை கொஞ்சம் செயற்கை. மொத்தத்தில் கொஞ்சம் குத்தல். கொஞ்சம் கற்றல்.

—நளினி சாஸ்திரி



**17**

கோமதி அவனை அங்கே எதிர்பார்க்கவே யில்லை. நான்கைந்து மாணவிகள் சூழக் கல்லூரியின் வெளிப்புற மைதானத்தில் வந்துகொண்டிருந்தபோது சுமங்களாவைத் தூரத்திலேயே பார்த்து விட்டாள். சில கணங்கள் நின்றாள். மாணவிகளை விட்டு விட்டு அவளிடம் வந்தாள்.

''திடீரென்று எங்கே போய் விட்டாய்? இதென்ன கோலம் நெற்றியில் பிளாஸ்திரி!'

சுமங்களா சிரித்தாள்.

''நான் வேறெங்காவது குடி போகலா மென்று முடிவெடுத்திருக்கிறேன்.''

மிகப் பெரிய வாதநாராயண மரத்தடியில் போடப்பட்டிருந்த சிமெண்ட் மேடையில் அவர்கள் இருவரும் உட்கார்ந்தனர்.

அவள் கோமதியிடம் எல்லாவற்றையும் கூறினாள். அன்று அவனிடம் அடிபட்ட நாளி லிருந்து ஏற்பட்ட நெஞ்சு வலியையும் கூறி விட்டு அழுதாள். புடவையை மேலே உயர்த்தி இரண்டு முழங்கால்களையும் காட்டினாள். அங் கும் இரண்டு வெள்ளைப் பிளாஸ்திரிகள் இருந் தன.

''அவர் நல்ல மனிதரே அல்ல என்று ஆரம்பத்திலிருந்தே என் மனத்தில் உறுத்திக் கொண்டிருந்தும் அவருடைய வலையில் விழுந்து இக்கதிக்கு ஆளாகி விட்டேன். அவர் என்ன வேண்டுமானாலும் செய்பவர். நீ என் தோழி என்பதைத் தெரிந்துகொண்டு விட்டதனால் உனக்கும் அவர் தொந்தரவு கொடுக்கக் கூடும்.''

கோமதி கையைக் கொட்டிக் கொண்டு நகைத்தாள்.

''அந்த ராஸ்கல் போன வாரம் வந்து என்னை மிரட்டி விட்டுப் போய்விட்டான். அதற்கெல்லாம் நான் பயப்படவில்லை. இப்படிப்பட்ட பொறுக்கிகளுக்கெல்லாம் நாம் பயப்படுவதாக இருந்தால் இந்தச் சமுதாயத்தில் வாழவே அருகதையற்ற வர்கள். அவன் என்ன சொன்னான் தெரி யுமா? நீ என்னுடைய அறையில்தான் இருப் பதாகக் கேள்விப்பட்டானும். உன்னை உடனே வெளியேற்றவில்லை என்றால் உனக்கு வர இருக்கிற ஆபத்தை நானும் சந்திக்க வேண்டி யிருக்கும் என்றான். மேலே கை வைக்க வந் தான். ஒரே அறை...! ஆள் அப்படியே அசந்து போய் நின்று விட்டான் 'போடா வெளியே, எச்சக்கலை நாயே'ன்னேன். அதற் குள் மற்றவர்கள் வந்து விட்டார்கள். அவன் நழுவி விட்டான் கன்னத்தைத் துடைத்துக் கொண்டே. அநேகமாகக் கறு விக்கொண்டுதான் போயிருப்பான்.''

''வேண்டாம் கோமதி. அவர் சரியான முரடர்.''

''அதைப் பற்றி யெல்லாம் நான் பயப் படவில்லை. என்னை நான் பார்த்துக்கொள் கிறேன். என்னிடம் ஏதாவது வாலாட்டி னன் என்றால் ஜன நடமாட்டம் நிறைந்த நடைபாதையிலேயே அவனைக் கொலை செய்து போட்டு விட்டுப் போய்க் கொண்டே இருப்பேன். கோழை போல் பயந்து அலற மாட்டேன்.... போடி சுமுக்கு வேறே எங்கும் போக வேண்டாம். மீதியைப் பிறகு பேசிக் கொள்ளலாம்.''

கோமதியிடம் பேசிவிட்டுக் கல்லூரிக் காம்பவுண்டுக்கு வெளியே வந்தாள் சுமங் களா.

எதிர்புறத்தில் நடைபாதை ஓரத்தில் அவள் பார்வை குத்திட்டு நின்றது.

சுகுமாரனும் பரமேஸ்வரனும் தீவிரமாக எதைப் பற்றியோ பேசிக்கொண்டு போனார்கள்.



சுகுமாரனும் பரமேஸ்வரனும் நண்பர்களாக இருப்பார்கள் என் கிற அவள் சந்தேகம் ஊர்ஜிதமாகி விட்டது.

அப்படியானால்?

அவனுக்கும் எல்லாம் தெரியும். தனக்கு உதவு வதாகச் சொன்னது?... தன் னைப் பற்றிய எல்லா விவரத்தையும் அவன் தெரிந்து வைத்துக் கொண்டிருக்கிறான். பர மேஸ்வரனும் இவனுமாகத் திட்டமிட்டே தான் ஒவ்வொரு காரியத்தையும் செய்திருக்க வேண்டும்.

சுமங்களா தன் அறைக்கு வந்தாள். பக்கத்து அறைகளில் இருந்தவர்கள் அவ ளிடம் அவள் மாயமாக மறைந்ததைப் பற் றிக் கேட்டனர்.

எல்லோருடைய கேள்விகளுக்கும் ஒரே ஒரு சிரிப்பைப் பதிலாகக் கொடுத்து விட்டு உள்ளே போய் விட்டாள்.

''ரெண்டு நாளாக ஒரு ரிஜிஸ்டர் தபால் வந்து உனக்காகக் காத்துக்கொண்டிருக்கிறது. ப்ரொபஸரைப் பார்த்திருந்தால் சொல்லி

# விளக்கு

விருப்பார்களே!'' என்றாள் ஒரு பெண். வேறு அறையில் இருப்பவள்.

''கோமதியிடம் பேசிவிட்டுத்தான் வந்தேன். ஒருவேளை அவள் சொல்ல மறந்திருக்கலாம்.''

''அவங்களுக்குத் தெரிய நியாயமில்லே. ரெண்டு நாளா அவங்க காலேஜுக்குப் புறப்பட்டுப் போன பிறகுதான் தபால்காரர் வந்து விசாரிக்கிறார்.''

அலமாரியில் அவள் பெயருக்கு விலாசமிட்ட நீளமான வேறு கவர் ஒன்று இருந்தது. அது, ஒரு பெரிய கனிஜப்பொருள் ஏற்றுமதி இறக்குமதிக் கம்பெனியிலிருந்து வந்திருந்தது. யூனியன் கமர்ஷியல் ஏஜென்ஸீஸ் என்பது அதன் பெயர்.

ஒரு மாதத்துக்கு முன் அக் கம்பெனியின் விளம்பர மொன்று வந்திருந்தது. அலுவலக உதவியாளர் தேவை என்று.

பௌதிகத்தை முக்கிய பாடமாகக்கொண்டவர்கள் மட்டுமே விண்ணப்பிக்கலாம் என்று வெளியான அந்த விளம்பரத்தைப் பார்த்து அவள் விண்ணப்பித்திருந்தாள்.

கவரைப் பிரித்தாள்.

அவள் அன்று எழுதிப் போட்டிருந்த கடிதத்துக்கு யூனியன் கமர்ஷியல் ஏஜென்ஸி கம்பெனியிலிருந்து ஒரு அறிவிப்பு வந்திருந்தது.

அந்தக் கம்பெனியார் நடத்தும் நேர்முக எழுத்துத் தேர்தலில் அவள் கலந்துகொள்ள அனுமதிக்கப்பட்டிருக்கும் அறிவிப்பு அது. இடம், நேரம், பரீட்சைக்கான அவகாசம் ஆகிய எல்லா விவரங்களையும் அது தெரிவித்தது.

மற்றொரு தபால்... அதுவும் பதிவுத் தபாலாமே! என்னவாக இருக்கும்?

ஒரு தபால் அவளுடைய மனத்தில் லேசாக நம்பிக்கை வளர்க்க உதவியது.

இந்த நேர்முக எழுத்துத் தேர்வில் பங்கு கொண்டு தேர்ந்தெடுக்கப்பட்டு விட்டால்! தற்போது இருக்கிற பிரச்னையின் ஒரு பகுதி தீர்ந்த மாதிரிதான்.

ஒன்றைத் தீர்த்துக் கொண்டு மற்றொன்றுக்குப் போகலாம். இரண்டு பக்கமும் போராடிக் கொண்டிருப்பதைத் தவிர்த்துக் கொண்டு நம் சக்தியை ஒருமுனைப்படுத்திக் கொள்ளலாம்.

வேலை என்று பெயருக்கு இந்த டிரை கிளீனிங்கில் இருந்து கொண்டு எதைச் சாதிக்க முடியும்? அதுவுமில்லாமல் கருமாரன் அவருக்கு நெருங்கிய நண்பன். அவனை வைத்துக் கொண்டே எனக்கு இன்னும் தொல்லைகளைத் தருவார். இனி அவனிடமும் நீடிக்கக் கூடாது.

'பரமேஸ்வரனின் நெருங்கிய நண்பனாக இருந்து கொண்டு அது வெளியில் தெரியாமல் தன் நடவடிக்கைகளை மேற்கொள்கிறான், என்னைப் பற்றிய எல்லாச் செய்திகளையும் வெளிப் படுத்துபவனும் அவனே.

'எனக்கு எந்த வித உதவி தேவை யானாலும் செய்வதாக அன்று என்னிடம் சொன்னவன்தானே இந்தக் கயவன். அவர் மோட்டார் சைக்கிளில் வந்து இறங்கியவுடன் மாடி அறையில் வேலை செய்துகொண்டிருந்தவர்களை வெளியே அனுப்பி விட்டு,



மகரிஷி

என்னைத் தனிமைப்படுத்தி, அவரை மாடிக்கு அனுப்பின வஞ்சகன்!

'அன்று கொலை நடந்திருந்தால்கூட அதைக் கவனிக்காதவன் போல இருந்திருப்பான். பிறகு நடந்த கொலையை மறைக்க அவருக்கு உதவியிருப்பான்.'

அவள் தனக்குள் ஒரு முடிவுடன் வெளியே கிளம்ப எண்ணினாள். அப்போது தபால்காரர் அந்த ஹாஸ்டலின் ஜல்லி நடைபாதையில் வந்து கொண்டிருந்தார். தோளில் பெரிய காக்கி நிறப் பை ஒன்று தொங்கியது. கையில் கட்டுக் கடிதங்கள். போதாதென்று விரல் இடுக்குகளில் கடிதங்களைச் சுமந்து இயந்திரம் போன்ற நடை.

அவளை அவர் கவனிக்கவில்லை. கையிலுள்ள கடிதங்களின் விலாசங்களில் மூழ்கியபடி நடந்து வந்ததால், சுமங்களாவின் அறையின் முன்பு இயந்திர கதியில் வந்து நின்றார்.

''சுமங்களா... ரூம் நம்பர் இருபது.''

''கொடுங்கள்.''

''ஓ! நீங்கள்தானா? நாலு நாளா இந்த ரிஜிஸ்டர்ட் தபால் டெலிவரியாகாம இருக்குதுங்க.''

ரிஜிஸ்டர் தபால் கைமாறியது.

தபால் பெற்றுக் கொண்ட அத்தாட்சிப் படிவத்தில் கையெழுத்திடும்போது, தபால் யாரிடமிருந்து வந்திருக்கிறது என்பதைப் பார்த்தாள்.

அது ஒரு அட்வகேட்டிடமிருந்து வந்திருந்தது.

படிவத்தில் கையெழுத்திட்டுக் கொடுத்தாள்; கவரை மிகக் கவனமாகப் பிரித்தாள். அதில்....

'...இப்பவும் நீங்கள் எனது கட்சிக்காரர் ராமலிங்க பரமேசுவரனை விவாகம் செய்து கொண்டீர்கள். ரிஜிஸ்திரார் முன்னிலையில் இந்து சமய முறைப்படி மாலை மாற்றிக் கொண்டு திருமணம் செய்து கொண்டீர்கள். திருமணமான பின்பு சில நாட்கள் கூட அவருடன் நீங்கள் சுமுகமாகக் குடும்பம் நடத்தவில்லை. அவர் பலமுறை உங்களைக் குடும்பம் நடத்த அழைத்தும் நீங்கள் வர மறுத்திருக்கிறீர்கள். உங்கள் பொறுப்புகளையும் உறவுகளையும் புரிந்து கொண்டு நீங்களாகவும் வரவில்லை. விவாகம் சுமுகமான சூழ்நிலையில் பரஸ்பர விருப்பத்தின் பேரில் நடந்தும் உங்களுடைய இந்த மாதிரி அசாதாரணப் போக்கினால் எனது கட்சிக்காரராகிய ராமலிங்க பரமேசுவரன் மிகவும் அமைதி இழந்து போயிருக்கிறார். நிம்மதியில்லாமல் போயிருக்கிறார்.

'உங்களைப் பத்து வயது முதல் எடுத்து வளர்த்து ஆளாக்கிப் படிக்க வைத்த அருணாசலம் பார்வதம் தம்பதியரின் வார்த்தைகளையும் மதிக்காமல் செயல்பட்டு, அவர்களுடைய வீட்டை விட்டுப் போய்த் தனியே தன்னிச்சையான வாழ்க்கையை மேற்கொண்டிருப்பதாக எனது கட்சிக்காரர் அறிகிறார்

'மேலும்

தாங்கள் தற்பொழுது மாடர்ன் டிரைகிளீனர்ஸ் என்கிற நவீன உலர் சலவையகத்தில் போதிய வருமானமுள்ள வேலையொன்றில் இருப்பதையும் என் கட்சிக்காரர் அறிகிறார். இவையன்னியில் குமாரன் என்கிற வாலிபருடன் தகாத முறையில் நட்புக் கொண்டிருப்பதாகவும் அறிகிறார். குமாரன் என்கிற அந்த வாலிபரும் தாங்களும் ஒரே இடத்தில் வேலை செய்வதால் உங்கள் நட்பு கணவன்–மனைவி என்கிற மாதிரி மாறித் தனிக் குடித்தனம் நடப்பதையும் என் கட்சிக்காரர் தெரிந்து கொண்டு விட்டார். மேற்குறிப்பிட்ட குமாரன் என்கிற வாலிபருடன் உங்களை என் கட்சிக்காரர் பல இடங்களில் பார்த்திருக்கிறார். சினிமா, பீச், கடைத் தெரு, ஹோட்டல் ஆகிய இடங்களில் என் கட்சிக்காரர் உங்கள் இருவரையும் சேர்ந்தாற்போல் பார்த்து, அமைதி இழந்தது மட்டுமின்றி, ஒரு மனிதாபிமான அடிப்படையில் – நடந்தவைகளை மறந்து விட்டுத் தன்னுடன் குடும்பம் நடத்த வரும்படியாகக் கேட்டும் அவருடன் குடும்பம் நடத்த வரமுடியாது என்று மறுத்திருக்கிறீர்கள். அப்படிக் குமாரனுடன் வாழும்படியான சூழ்நிலையை நீங்களே உருவாக்கிக் கொண்டு விட்டதால் உங்களுடைய விருப்பத்துக்குக் குறுக்கே வர என் கட்சிக்காரர் மனிதாபிமான அடிப்படையில் விரும்பாத காரணத்தால் உங்களை விவாகரத்துச் செய்ய இந்த நோட்டீஸ் அனுப்பப்படுகிறது. தங்கள் மேல் விவாகரத்துக் கோரிச் சட்டப்படி கோர்ட்டில் எமது கட்சிக்காரர் தகுந்த



முற்காலத்தில் உலகைச் சுற்றிவந்த மார்கோபோலோ தம் பிரயாணக் குறிப்புகளில் மடகாஸ்கர் கடற்கரைப் பிரதேசத்தில் தாம் கண்ட ருக் (Rukh) என்ற மிகப் பெரிய பறவையைப் பற்றி மிக விசித்திரமான தகவல்களை தந்துள்ளார்.

இந்தப் பறவை பிரமிக்கத்தக்க அளவிற்கு பெரியதாகக் காணப்பட்டது என்றும், அது எட்டு மீட்டர் உயரமும், அதன் இறகுகள் பதினாறு மீட்டர் நீளமுடையதாகவும் இருந்தது என்றும் குறிப்பிட்டுள்ளார்.

இதன் முட்டைக்குள் பதினாறு லிட்டர் திரவப் பொருள் காணப்பட்டதாம்.

பாதர் ஜோர்டானஸ் என்ற சரித்திர ஆசிரியர் தன் 'INDIA TERTIA' என்ற நூலில் 'ROC' என்ற பறவை ஒன்று யானைகளைத் தன் அலகுகளாலும், கால்களாலும் தூக்கிச் செல்லக் கூடிய பலம் பெற்றிருந்ததாகக் குறிப்பிடுகின்றார். -பி நாராயணன்

# புதிய ஃபேப் டிட்டர்ஜெண்ட் கட்டி

## வெளுக்கிறது உங்கள் துணிகளை அதிகத் தூய்மையாக

அதிக
வெண்மையாக

அதிக
பிரகாசத்துடன்

### விசேட பளிச்சிட வைக்கும் சக்தியை உள்ளடக்கிய உன்னத ஃபார்முலா.

புதிய ஃபேப் டிட்டர்ஜெண்ட் கட்டியின் சக்திவாய்ந்த நுரைவளம் ஆழ ஊடுருவிச் சுத்தம் செய்து விடாப்பிடியான அழுக்குகளையும் அறவே அகற்றுகிறது.
அதன் விசேட பளிச்சிட வைக்கும் சக்தி வெண்மைத்துணிகளை அதிக வெண்மையாக்குகிறது— வண்ணத்துணிகளை அதிகமாக பிரகாசிக்க வைக்கிறது—
உங்கள் துணிகளுக்கு தூய்மை கலந்த புதுமணம் தருகிறது.

அது ஈரக்கசிவற்றது—எனவே அதிக துணிகளை வெளுக்கிறது— உங்களுக்கு சிறந்த சிக்கனம்.

**இணையில்லா வெண்மையும், ஈடில்லா பிரகாசமும் தரும் சலவைக்கு—புதிய ஃபேப் டிடர்ஜெண்ட் கட்டி!**




தமிழ்நாடு மற்றும் பாண்டிச்சேரியில் கிடைக்கிறது.

**கோல்கேட்— பாமோலிவ்**
தரமாக அளிப்பது

FDC-0.2 TM

நடவடிக்கை எடுக்க இருக்கிறார் என்பதை இந்த நோட்டீஸ் மூலம் அறியவும்....'

பெட்டியில் குத்துக்காலிட்டு அமர்ந்தவள் சுவரில் சாய்ந்து கொண்டு அதைப் படித்தாள்.

அதில்தான் எவ்வளவு கற்பனைகள்!
எவ்வளவு பொய்கள்!
புனைந்துரைகள்!
மாய்மாலங்கள்!

'சுமுகமாக நடந்த விவாகமாமே! பரஸ்பரம் விருப்பத்தின் பேரில் நடந்த கல்யாணமாமே! அருணாசலம், பார்வதம் தம்பதியரின் வார்த்தைகளையும் மீறி நான் தன்னிச்சையாகச் செயல்படுகிறேனாம்!'

அவள் வாய் விட்டுச் சிரித்தபோது ஜன்னல் வழியே அவள் அறைக்குப் பக்கத்து அறையில் தங்கியிருக்கும் பெண் ஒருத்தி பார்த்தாள்.

''என்ன நீயே தனியா எதையோ படிச்சுட்டுச் சிரிக்கிறே?''

''ஹாஸ்யக் கதை யொன்று படித்தேன். சிரிப்புத் தாங்கவில்லே.''

''யார் எழுதினது?''

''யாரோ முன் பின் தெரியாத ஆசிரியர். அவர் பி.ஏ. பி.எல். படித்தவராம்.''

''பூரா படிச்சிட்டியா?''

''இல்லே, படிச்சுட்டே இருக்கேன்.''

ஜன்னலருகில் நின்றவள் போய்விட்டாள்.

விவாகரத்துக்காக அவன் அனுப்பிய வக்கீல் நோட்டீஸைப் பார்த்து அவள் அதிர்ச்சி அடையவில்லை.

எண்ணத்தாலும், செயலாலும், பார்வையாலும் என்றோ அந்நியமாகிவிட்டவன், அவன். அந்நியோந்நியம் இல்லாத ஒருவனை, பெண்மையின் மாதுர்யமான உறவுகளைக் காலில் போட்டு மிதிக்கிறவனை, அவள் வெறுத்தாள். மிருக இச்சைகளால் துடித்துக் கொண்டிருப்பவனின் மாய வலையில் சில நிமிஷங்கள் தான் விழுந்து விட்டதை எந்த நேரத்தில் மனப்பூர்வமாக உணர்ந்துகொண்டாளோ... அந்த நிமிஷம் முதலே அவன் தனக்கு அந்நியமானவன் என்கிற முடிவுக்கே வந்துவிட்டாள். மூன்றும் மனிதனை நினைக்கிற நினைப்புத்தான் அவளுக்கு.

தான் பெற்றுக் கொண்ட விவாகரத்துக்கான வக்கீல் நோட்டீஸைப்பார்த்து அதிர்ச்சி அடைய இனி அவளிடம் எந்த விதமான ஒளிவு மறைவும் இல்லே. மாறாக அதை எதிர்கொண்டு வெற்றி காண வேண்டுமென்கிற உருத்தலே மிதமிஞ்சி இருந்தது. இவனாக ஒரு வலையை விரித்துக் கொண்டு அவனே விழப் போகிறான்.

அதை ஒரு முறைக்குப் பல முறை படித்து விட்டே பெட்டியில் வைத்தாள்.

அதில் உள்ள எல்லா முரண்பாடுகளையும் மேலே விழுந்த தூசியைத் துடைத்துக் கொள்வது போலத் துடைத்துவிட அவள் மனம் பக்குவப்பட்டிருந்தாலும், சுகுமாரனுக்கும் அவளுக்கும் நடுவே தொடர்பு இருப்பதாகக் கூறப்பட்டிருக்கும் அசிங்கமான, அநாகரீகமான அம்சங்களை அவளால் ஜீரணிக்கவே முடியவில்லை. அவளுக்கும் சுகுமாரனுக்கும் நடுவே நெருக்கமான தொடர்பு இருப்பதாகக் கற்பிக்கப்படும் உக்கிரமான தாக்குதலின் பாதிப்பு அவளை அடித்துப் போட்ட மாதிரி இருந்தது.

பரமேசுவரன் அன்று அவளை நையப் புடைத்ததை விடக் கொடியதான அபவாதமாக இருந்தது.

கையைத் தாடையில் ஊன்றியவாறு வெறுமனே உட்கார்ந்திருந்தாள்.

சுகுமாரனுடன் அவள் சுற்றினதாகவும், கணவன் மனைவி மாதிரிக் குடும்பம் நடத்துவதாகவும் சொல்வது எவ்வளவு பெரிய அபாண்டம்! உள் நோக்கமின்றி இது வெளிப்பட்டிருக்காது. இது ஒரு கூட்டுச் சதியின் அப்பட்டமான உச்சக் கட்டம். இந்தச் சதிக்குச் சுகுமாரன் அவருக்கு உதவப் போகிறான் என்பது உறுதியாகி விட்டது.

'நான் எதிர்வழக்காடி அவரைப் பெட்டி ஏற்றும்போது அவன், 'ஆமாம், இந்தப் பெண்ணுடன் நான் குடும்பம் நடத்துகிறேன்' என்றோ, 'நாங்கள் சுற்றுவது உண்மைதான்' என்றோ அவன் நிச்சயமாகக் கூறுவான்—கூறவேண்டும் — அப்படிக் கூற வைத்து என்னை அவமானப்படுத்த வேண்டும். அது தானே இட்டம்?'.

பார்க்கலாமே!

இதை நிறைவேற்றிக் கொள்ள இடம் தராமலே காரியங்களைச் செய்ய வேண்டும்.

சுமங்களா எழுந்தாள். (தொடரும்)

---



'FREEDOM ROAD' என்ற படத்தில் நடித்ததற்காக முகமது அலிக்குக் கிடைத்த தொகை சுமார் 3,50,000 டாலர்கள். தனக்கென்று கொள்கைகள் இருப்பதால் சந்தோஷமாக இருப்பதாகக் கூறும் முகமது அலி உலகில் கடவுள் இவரைத் தம்முடைய சீடராக அனுப்பியிருப்பதாக நம்புவதோடு காரணமின்றி கடவுள் என்னை இவ்வளவு பிரபலமானவனாகப் படைத்திருப்பாரா? என்றும் கேட்கிறார்.

(வீக் எண்ட் ரெவ்யூ) தகவல்: அ. குமார்




## ஜெயவண்ணன்

காவிரியாற்றின் கரையோரம் குனிந்து உயர்ந்திருந்த அந்த நாவல் மரத்தின் தாழ்ந்த கிளையில் நைலக்ஸ் புடவையில் தொங்கிக் கொண்டிருந்தது அந்தச் சடலம்.

உயிர் பிரிவதற்கு முன் அந்தச் சடலத்தின் பெயர் நிஷா.

கூடியிருந்த கூட்டத்தை விலக்கிக்கொண்டு மரத்தின் மீதேறிப் புடவையை அறுத்து அந்தச் சடலத்தைக் கொண்டு வந்து தரையில் கிடத்தினார்கள் இரண்டு கான்ஸ்டேபிள்கள்.

அந்தச் சடலத்தை உற்றுப் பார்த்தார் இன்ஸ்பெக்டர் ராஜுவேல்.

வாழவேண்டிய வயதில் இந்த அழகிய மயிலுக்கு இப்படி ஒரு முடிவா?

சடலத்தைப் பிரேதப் பரிசோதனைக்கு அனுப்பிவிட்டு ஜீப்பில் ஏறினார் ராஜுவேல்.

“உங்க பொண்ணு இறந்த துக்கத்திலே நீங்க வருத்தப்பட்டுக்கிட்டு இருக்கிங்க. இந்த நேரத்திலே உங்களுக்குச் சிரமம் தர்றதுக்காக நான் வருத்தப்படறேன்'' என்று ஆரம்பித்தார் ராஜுவேலு.

''பரவாயில்லே. நீங்க உங்க கடமையைத் தானே செய்யறீங்க...'' என்றார் நிஷாவின் தந்தை கரகரத்த குரலில்.

''இந்தச் சின்ன விஷயத்திலே நிஷாவுக்கு இப்படி ஒரு முடிவு ஏற்பட்டிருக்க வேண்டாம்.''

''நம்ப கையிலே என்ன லார் இருக்கு? அவளே தன் முடிவைத் தேடிக்கிட்டா... அவ விதி முடிஞ்சுட்டுது...''

''அப்போ இது தற்கொலைன்னு நினைக்கிறீங்களா?''

''வேறே எப்படி நினைக்கச் சொல்றீங்க இன்ஸ்பெக்டர்?''

''ம்....வந்து தற்கொலைன்னு ஏதாவது காரணம் இருக்கணும்...''

''நேரா விஷயத்துக்கு வாங்களேன்... 'நீங்க அவ மனசு வருத்தும்படி நடந்தீங்களா? அதனாலேதான் அவ தூக்குப்போட்டுக்கிட்டாளா'ன்னு கேளுங்களேன்'' என்று அவர் கேட்கவே ராஜுவேல் ஒரு கணம் தடுமாறி விட்டார்.

நிஷாவின் தந்தை தொடர்ந்தார். ''போன வாரம் நடந்த சம்பவத்தைச் சொல்றேன் கேளுங்க.''

ராஜுவேல் நிமிர்ந்து உட்கார்ந்தார்.

''நிஷா என்னோட ஒரே பொண்ணு. அவ சம்பாத்தியத்திலேதான் என் குடும்பம் நடக்குது. என் தங்கை மகன் பூபதி பக்கத்துக் கிராமத்திலே இருக்கான். பிறந்தது முதல் அவனுக்கு இவள், இவளுக்கு அவன்'னு முடிவு பண்ணியிருந்தோம். நிஷா வேலை

பார்க்கிற ஆபீஸிலே கரிபால்னு ஒருத்தன் இருக்கான். போன வாரம் நிஷா என்கிட்டே வந்து கரிபாலைக் காதலிக்கிறதைப்பத்தியும், அவனையே கல்யாணம் செஞ்சுக்க விரும்பற தாகவும் சொன்னா. எனக்கு ஒரே அதிர்ச்சி. என்கிட்டத் தலைநிமிர்ந்து பேசத் தயங்கும் நிஷா தன் காதல் விவகாரத்தைத் தைரியமா என்கிட்டச் சொல்ற அளவுக்கு அவ மனசை கரிபால் ஆக்கிரமிச்சிருக்கான்னு புரிஞ்சுக் கிட்டேன்.''

''நீங்க என்ன பதில் சொன்னீங்க?''

''சொன்னேன். இந்தக் கல்யாணத்துக்குச் சம்மதிக்க முடியாதுன்னு சொன்னேன்.''

''அப்புறம்?''

''உனக்கும் பூபதிக்கும் தான் கல்யாணம் நடக்கும். இதை யாராலும் மாத்த முடியாதுன்னு முடிவாச் சொல்லிட்டேன். அவ அழுதுக்கிட்டே அந்த இடத்தை விட்டுப் போயிட்டா...'' ''இந்தச் சம்பவத்துக்குப் பிறகு அவ என்கிட்டே சரியாப் பேசறது இல்லே. அவமனசிலே இப்படி ஒரு முடிவு இருக்கும்னு தெரிஞ்சிருந்தாப் பேசாம அவ இஷ்டப் படியே நடத்திருப்பேன்.''

''நீங்க நிஷாவை எப்போ கடைசியாப் பார்த்தீங்க?''

''நேத்து ராத்திரி ஒன்பது மணி இருக்கும். அவ படுக்கப் போனது எனக்குத் தெரியும். அதற்கு அப்புறம்தான் அவ காவிரிப் படு கைக்குப் போயிருக்கா. இருட்டைக் கண் டாலே அலறும் நிஷா, அந்த இருட்டிலே எப்படித் தன்னந் தனியா அங்கே போனான்னு நினைச்சா எனக்கு ஆச்சரியமா இருக்கு.''

''நல்லது சார். நீங்க சொன்ன விவரத் துக்கு நன்றி. தேவைப்பட்டா நான் உங்களை மறுபடியும் சந்திக்கிறேன்.''

ஜீப் புறப்பட்டது.

**கி**ளைத்து மேட்டில் பரந்து விரிந்து தழைத் திருந்த ஆலமரத்தின் நிழலில் கயிற்றுக் கட்டிலில் உட்கார்ந்து கொண்டு கரும்பு வயல்களுக்குத் தண்ணீர் பாய்வதைப் பார்த் துக்கொண்டிருந்தான் பூபதி.

கப்பி ரோட்டில் ஜீப்பை நிறுத்திவிட்டு வரப்பில் இன்ஸ்பெக்டர் நடந்து வருவதைக் கண்டு, எதிரே சென்று அவரை வரவேற்றான்.

''ஸார் ஏது இவ்வளவு தூரம்?''

''நிஷா மரணம் பற்றி உங்க கிட்டச் சில விவரங்கள் கேட்க வேண்டியிருக்கு....'' என்று கூறிவிட்டு இன்ஸ்பெக்டர் பூபதியின் முகத்தை ஆராய்ந்தார்.

''உங்களுக்கும் நிஷாவுக்கும் கல்யாணம் செய்ய உங்க மாமா — நிஷாவின் தந்தை— முடிவு செய்திருந்தார், இல்லையா?''

''ஆமாம்.''

''ஆனா நிஷா வேற ஒருத்தரைக் காத லிச்ச விஷயம்....''

''எனக்குத் தெரியும். மாமாவே இதைப் பத்தி என்கிட்டச் சொன்னார். 'நிஷா இந்த விஷயத்திலே ரொம்பப் பிடிவாதமா இருக்கா. 'அவனை'க் கல்யாணம் செய்துக்கச் சம்மதம் தர முடியாதுன்னு சொல்லிட்டேன். கொஞ்ச நாள் போனா நிஷா மனசு மாறிடும். உங்க கல்யாணத்தை முடிச்சிடுறேன்'னார்.''

''ஐ ஸீ.''

''ஆனா, நா இதுக்கு ஒத்துக்கல்லே.''

''ஏன்?''

''என்னை விரும்பாத ஒரு பொண்ணோட மனசை மாத்திக் கட்டாயமா அவளோடு வாழ்றது சாத்தியம்னு நான் நினைக்கலே.''

''உங்க முடிவை உங்க மாமா கிட்டே சொன்னீங்களா?''

''ம்... சொன்னேன். இந்த விஷயத்திலே நிஷாவைக் கட்டாயப்படுத்த வேண்டாம்னு சொல்லிட்டு வந்துட்டேன். அவர் மறுபடி யும் அவளைக் கட்டாயப்படுத்தி யிருப்பார்னு நினைக்கிறேன். அதனால்தான் நிஷா இந்த அவசர முடிவுக்கு வந்திருக்கா.''

''உங்க உதவிக்கு மிக்க நன்றி நா வர் றேன், மிஸ்டர் பூபதி.''

ராஜுவேல் புறப்பட்டார்.

அடுத்து விசாரிக்கப்பட வேண்டியவன் கரி பால்.

இரண்டு நாட்களாக அவன் ஊரில் இல்லை. அநேகமாக இன்று வந்திருப்பான்.

கரிபாலின் அறைக் கதவு சாத்தியிருந்தது. தட்டினார். கதவு திறந்தது.

''மிஸ்டர் கரிபால்...''

''எஸ்....நான்தான் இன்ஸ்பெக்டர்! உள்ளே வாங்க....''

உள்ளே நுழைந்து ராஜுவேல் உட்கார்ந்த போது கரிபால் சொன்னான்: ''ஸாரி இன்ஸ் பெக்டர். ரெண்டு நாளா ஊரிலே இல்லே. கான்ஸ்டபிள் வந்து தேடிட்டுப் போனதா வீட்டுக்காரர் சொன்னார். உங்களைப் பார்க் கத்தான் புறப்பட்டுக் கொண்டிருந்தேன்.''

''உங்களுக்குச் சிரமம் தராம நானே வந் துட்டேன்.''

பின், ''நிஷாவைப் பற்றி எனக்குச் சில விவரங்கள் தேவையா யிருக்கு...'' என்றார்.

''நிஷா....நிஷா.....'' என்று முணு முணுத்த கரிபால், ''நான் ஊருக்குப் போன போது அவளை முழுசாப் பார்த்தேன். இப்போ இப்போ.... ஷி ஈஸ் நோ மோர்...'' என்று

எழுத்தாளர் : ''என்கதையைப் படிச்சிட்டு ஏன் சார் அழறீங்க... அவ்வளவு உருக்கமாவா இருக்கு...?''

மற்றவர்: ''இறந்து போன என் நண்பனுடைய ஞாபகம் வந்திடுச்சு...''

எழுத்தாளர்: ''இறந்து போன நண்பனுடைய வாழ்க்கையைப் போலவே நான் எழுதிய கதை -யும் இருக்கா சார்...?''

மற்றவர்: ''ஊஹூம்... 10 வருஷத்திற்கு முன்னே இந்தக் கதையை அவன் ஒரு பத்திரி கையில் எழுதியிருக்கான்...''

-இளந்துக்கடவு ரவி



கூறிவிட்டுக் கண்களைத் துடைத்துக்கொண்டான்.

'ஸாரி மிஸ்டர் கரிபால். உங்க வேதனை எனக்குப் புரியுது...''

''நாங்க உயிருக்குயிரா நேசிச்சோம். அவளோட அப்பா மட்டும் குறுக்கே நிற்க லேன்னு நிஷா என் மனைவியா ஆகியிருக்க வேண்டியவ. தம்மோட பிடிவாத குணத்தாலே தம் பெண்ணோட உயிரை அநியாயமா பலி வாங்கிட்டார் அந்தக் கல் நெஞ்சக்காரர்.''

''ஆமாம். நீங்க சொல்றதும் உண்மைதான். நிஷாவை எப்போக் கடைசியாப் பார்த்தீங்க?''

''புதன் கிழமை மதியம் ஒரு மணிக்கு.''

''அதாவது நிஷா இறந்த அன்றைக்கு மதியம்.....''

''ஆமாம். நான் அவசரமா ஊருக்குப் போக வேண்டி யிருந்ததால் மதியம் அரை நாள் லீவு போட்டுட்டுப் போயிட்டேன். போகும்போது நிஷா கிட்டச் சொல்லிட்டுத் தான் போனேன்.''

''அப்படியா?''

''ஆமாம் ஸார். இப்படித் தற்கொலை பண்ணிப்பான்னு தெரிஞ்சிருந்தா ஊருக்கே போயிருக்க மாட்டேன், ஸார்.'' மறுபடியும் கண்களைத் துடைத்துக் கொண்டான் கரிபால்.

''சனிக்கிழமை மதியம் நீங்க ஊருக்குப் போயிட்டீங்களா?''

''ஆமாம். ரெண்டு மணிக்கே புறப்பட்டுட்டேன்.''

''ரயிலில் கூட்டம் அதிகமா இருந்திருக்குமே மிஸ்டர் கரிபால்.''

''நான் எப்பவும் ரயிலில் போறதில்லை! ஸார். இரண்டே கால் பஸ்ஸில் போனேன்.''

''ஆல்ரைட் மிஸ்டர் கரிபால். ஸ்டேஷனுக்குப் போவோமா?'' என்று கேட்டுக் கொண்டே எழுந்தார் ராஜவேல்.

''ஸ்டேஷனுக்கா? எதுக்கு ஸார்?''

''ஒரு கொலைகாரன் இருக்க வேண்டிய இடம் அதுதான்.''

''இன்ஸ்பெக்டர்!'' அலறினான் கரிபால்.

''ஸாரி மிஸ்டர் கரிபால். நீங்க நிஷாவை ஆரம்பத்திலே காதலிச்சது உண்மை. ஆனா, நல்ல வசதியான இடத்திலே, நிறைய சீர் வரிசையோடும், நல்ல வரதட்சிணையோடும் வரக்கூடிய ஒரு பொண்ணைப் பார்த்து உங்க பெற்றோர் முடிவு பண்ணிட்டாங்க. நீங்களும் ஒரு தடவை அந்தப் பெண்ணைப் பார்த்துட்டு வந்தீங்க. அடுத்த மாசம் தேதி வைக்கிறதா ஏற்பாடு. இந்த விவரங்களை உங்க நண்பர் மூர்த்திகிட்டே விசாரிச்சுத் தெரிஞ்சுக்கிட்டேன்....''

''ஸார்....''

''பரம ஏழையான நிஷாவை மணக்க உங்களுக்கு விருப்பமில்லே. ஆனா, உண்மை தெரியாத நிஷா அவுங்க அப்பா கிட்டே உங்களை மணக்கச் சம்மதம் கேட்டிருக்கா. அப்புறம் என்ன நடந்திருக்கும்னு யூகம் செய்யறது அவ்வளவு சிரமமில்லே. ஒரு நாள் நீங்க நிஷா கிட்டே 'எங்க அப்பா அம்மா உன்னை மணக்கச் சம்மதம் தரலே,



வியாபாரி: கத்தரிக்காய் கிலோ ரூ 1-50 உங்களுக்காக ரூ. 1-25 தக்காளி கிலோ ரூ. 1-25 உங்களுக்காக ரூ 1-00 ஆக மொத்தம் 2-25 ஆச்சுங்க.

காய் வாங்கியவர்: இந்தா எனக்காக ரூ 2-00 வச்சுக்க.

-ஏ. ஜீ. வல்லபதாஸ்

என்னை மறந்துடுன்னு சொல்ல, அவ உங்க மேலே பாய்ந்திருக்கா. 'என் வயிற்றிலே வளருகிற குழந்தைக்குப் பதில் சொல்லுங்க'ன்னு கேட்டிருக்கா. விஷயம் இந்த அளவுக்கு விபரீதமாப் போயிருக்கும்னு நினைக்காத நீங்க அவளுக்கு ஒரேயடியா முடிவு கட்டுவதைத் தவிர வேறு வழியில்லே என்கிற முடிவுக்கு வந்திருக்கீங்க. சனிக்கிழமை மதியம் லீவு போட்டுட்டு 'இரவு பத்து மணிக்கு என் அறைக்கு வா. நாம் ஊரை விட்டே போயிடலாம்'னு அவ கிட்டச் சொல்லலே, அவளும் அப்படியே வந்திருக்கா. அவளோடு பேசிக்கிட்டே காவிரிப் படுகைக்குப் போயிருக்கீங்க. அங்கே அவ கழுத்தை நைலக்ஸ் புடவையாலேயே நெரிச்சுக் கொன்னு நாவல் மரத்திலே அவ உடலைத் தொங்க விட்டுட்டு வந்துட்டீங்க. இதுதான் நடந்தது.''

''பொய். உங்க குற்றச்சாட்டுக்கு ஆதாரமே இல்லே. கொலை நடந்த அன்றைக்கு இரவு நான் எங்க ஊரிலே இருந்தேன். இதை நான் நிரூபிக்க முடியும்.''

''உங்க சாட்சியத்தை சுலபமா உடைக்க என்னால் முடியும். நீங்க லீவு போட்டது உண்மை. உங்க மேலே சந்தேகம் வராமல் இருக்க நீங்க செய்த முன்ஜாக்கிரதை நடவடிக்கை அது. ஆனா, நீங்க அன்னிக்கு ஊருக்குப் போகவே யில்லே.''

''.....''

''இருட்டைக் கண்டாலே நிஷா அலறுவான்னு அவ அப்பா சொன்னார். அதனாலே, அவ தனியாக்காவிரிப் படுகைக்குப் போயிருக்க முடியாதுங்கற முடிவுக்கு வந்தேன். பிரேதப் பரிசோதனையில் அவள் கர்ப்பிணின்னு தெரிய வரவே, என் முழுப் பார்வையும் உங்க மேலே திரும்பியது. கடைசியா நீங்க சொன்ன ஒரே ஒரு பொய் உங்களைக் காட்டிக் கொடுத்திட்டுது.''

''பொய்யா?''

''ஆமாம். நீங்க எப்போ ஊருக்குப் போனீங்க?''

''புதன் கிழமை மத்தியானம் ரெண்டே கால் பஸ்ஸில்...''

''புதன் கிழமை பகல் மாணவர்களுக்கும் பஸ் டிரைவர்களுக்கும் ஏற்பட்ட தகராறு காரணமா அன்னிக்கு மதியம் பன்னிரண்டு மணியிலிருந்து மறுநாள் விடியற்காலை நாலு மணி வரைக்கும் டவுனில் எந்த பஸ்ஸும் ஓடலே. உண்மை இப்படி இருக்கும்போது நீங்க எப்படி மதியம் ரெண்டே கால் பஸ்ஸில் ஊருக்குப் போயிருக்க முடியும்?''

கரிபாலின் தலை தாழ்ந்தது.

''நான் ஒண்ணும் மரியாதைக் குறைவா பேசலே. 'நான் ஸென்ஸஸ் எடுக்க வந்திருக்கேன்'னு தான் சொன்னேன் 'நான் ஸென்ஸ்'ன்னு இட்டலே!''



- குடும்பத்தலைவன் யார்?
- வாயிலே என்ன கொழுக்கட்டையா? நீங்க தான்னு சொல்லிக்குங்களேன்!



# நான்..நான்ஸென்ஸ்..ஸஸ்!



- உங்க பையன் வேலையிலே இருக்கானா? சம்பளம்?
- இருக்கான். சம்பளம் ரூ 300.
- கல்யாணம் ஆயிடுச்சா?
- இல்லிங்க.
- அப்ப.. ஜாதகத்தைக் கொடுங்களேன்!



- உன் பேர் என்ன?
- பாட்சா, சௌம்ய நாராயணன், அறிவுக் கொழுந்து, அப்பனசாமி, ப்ளேடு பக்கிரி... எல்லாம் என்பெயர்தான்! உனக்கு எது பிடிக்குதோ எழுதிக்கோ.



- பெத்தபுள்ளயே மதிக்கறதில்லே, நீ காலிலேவிழுந்துஸென்ஸஸ் கணக்கு விவரம் கேக்கறே! என்னமரியாதை!...மகாராசனா இரு...
- வாசல்படி தடுக்கி விழுந்தவர் கிட்டபோயி என்னென்னமோ பேசிக்கிட்டு... சும்மா இருங்க!


குடிகாரன்: என் கண்ணால்லியோ.. அடம் பண்ணாம ஒரு வாய் 'குடிச்சா' தான் ஸென்ஸஸ் விவரம் சொல்லுவேன்!


உங்க பேர்?
சசி!
ஆணா? பெண்ணா?


ஒருத்தர் வோட்டர் லிஸ்ட் எடுக்க வந்து என் மூத்த பெண்ணைக் கட்டிக்கிட்டார்! ஒருத்தர் காலரா ஊசிபோட வந்து என் இரண்டாவது பொண்ணைக் கட்டிக்கிட்டார்!.. இப்ப நீங்க ஸென்ஸஸ் எடுக்க வந்திருக்கீங்க.....


ஸென்ஸஸ் எடுக்க வந்திருக்கேன்... உங்க பேரு?


யாரு வீட்லே? பெயரு என்ன? எத்தனை பேர் இருக்கீங்க?
சுமார் 60 கோடி பேர் இருக்கோம். என் பெயர் பாரத மாதா!

# கனவென வந்து...

சுந்தரராஜன்



**பு**த்தகத்தை மீண்டும் திறந்தான் நந்தா. இந்தப் புத்தகத்தை மூன்றாம் தடவையாகப் படிக்கப்போகிறான். இரண்டு காரணங்கள். அவனுக்கு அது ரொம்பப் பிடித்தது; இன்னொன்று வேறு புதுப் புத்தகம் நாளைக்குத் தான் கிடைக்கும்.

அவனுக்குக் கொஞ்சம் அலுப்பாக வந்தது. புத்தகத்தை மூடி, அப்படியே தன் மார்பின் மீது போட்டுக் கொண்டான். கண்களை நன்கு விரித்து மேலே கவரைப் பார்த்தான்.

இன்னும் எத்தனை நாட்களுக்கு இப்படியே படுத்துக் கொண்டு மேலே பார்த்துக்கொண்டிருக்க வேண்டும்?

அறையில் வெளிச்சம் பரவியது.

வலது பக்கம் தலையைத் திருப்பிப் பார்த்தான். காலண்டர் நேற்றையத்தேதி பத்து என அறிவித்தது.

ஓ. இன்றைக்குத் தேதி பதினொன்று அல்லவா?

நந்தாவின் மனம் கொஞ்சம் நடுங்கியது. சரியாக இன்றோடு இரண்டு மாதங்கள் ஆகிவிட்டன! இரண்டு மாதங்களா? நந்தாவுக்குச் சற்று வியப்பு ஏற்பட்டது. இன்னும் எத்தனை நாட்களுக்கு இப்படிப் படுத்துக் கொண்டிருக்கப் போகிறான்? மீண்டும் அலுப்புத் தோன்றியது.

சரியாக இரண்டு மாதங்களுக்கு முன்பு தான் நந்தா அந்த விபத்தைச் சந்தித்தான்.

**அ**றைக் கதவு மறுபடியும் தட்டப்பட்டது. ''யெஸ்'' என்றான் நந்தா.

கதவு திறந்தது. அப்பா உள்ளே நுழைந்தார். அவரைத் தொடர்ந்து ஒரு வாலிபன் உள்ளே வந்தான். அவன் அம்மா அருகில் அமர்ந்து பணிவிடை செய்தவள்—படுக்கையிலிருந்து எழுந்து கொண்டாள். நந்தா மறந்துபோய் எழ முயன்றான்.

''ஓ....நோ, ப்ளீஸ் ரிலாக்ஸ்!''—அந்த வாலிபன் பதற்றமான குரலில் கூவிக்கொண்டே ஓடிவந்தான்.

நந்தா மீண்டும் படுக்கையில் சாய்ந்துகொண்டே அந்த வாலிபனை வியப்புடன் பார்த்தான். சில விநாடிகள் மௌனத்தில் மூழ்கின.

''வணக்கம்! என் பெயர் மூர்த்தி.''

''வணக்கம். என் பெயர் நந்தா. உட்காருங்கள். இந்த நொண்டியாலே உங்களுக்கு ஏதாவது காரியம் ஆகவேண்டுமா?''

அவன் முகம் அடிபட்டது போலக் கொஞ்சம் சுருங்கியது. கண்களில் கவலை வந்து உட்கார்ந்து கொண்டது.

அப்பா பேச்சை மாற்றினார்.

''நந்தா, இவர் பத்துப் பதினைஞ்சு நிமிஷமா உன்னைப் பார்க்கணும்னு வாதாடிப் பார்த்தார். யார்ன்னு சொல்ல மாட்டேங்கறார். உன்னைப் பார்த்த பிறகுதான் போவாராம்!''



அவன் அவளையே சற்று நேரம் பார்த்தான்.

''மிஸ் நந்தா காரணம் சொன்னால் உங்கள் தந்தை என்னை இங்கே வரவிட்டிருக்கவே மாட்டார்.''

''அப்படியா? ஏன்?''

''மிஸ் நந்தா... உங்களை இந்த நிலைக்குக் கொண்டு வந்தவன் தான் என்னை இங்கு அனுப்பியிருக்கிறான்.''

''வாட்!'' — அப்பா கத்தினார். ''எவன் அந்த அயோக்கியன்? அவனைக் கூட்டிண்டு வா. அந்தப் பயலைத் தேடிண்டு இருக்கேன்.''

''அப்பா, விடுங்கள் அவரை...'' — நந்தாவின் குரலில் இருந்த தீர்மானம் அப்பாவைச் செயலற்றவராகத் திகைக்கச் செய்தது.

''இப்ப அவரைக் கண்டு பிடிச்சு என்ன செய்யப் போறதா உத்தேசம்?''

''ம்....'' — அப்பா வார்த்தைகள் கிடைக்காமல் திண்டாடினார். ''என்ன கேள்விம்மா? அவன் மேல் கேஸ் போட்டு....''

''பணம் வாங்கலாமா? அந்தப் பணத்தை வச்சுண்டு என்ன பண்ணப் போறேம்? நான் நொண்டியா இருக்கணும்னு தலையெழுத்துன்னு, அந்தப் பணத்தைக் காலுக்குப்பதிலா ஒட்ட வச்சுண்டு நடக்க முடியுமா?''

அப்பா மௌனமானார். வாஸ்தவம். அவருக்கு என்ன பணத்துக்கா குறைச்சல்?

''ஓ... சாரி சார்... மிஸ்டர் மூர்த்தி! நான் ஒரு சாதாரணத் தகப்பன். கொஞ்சம் உணர்ச்சி வசப்பட்டுட்டேன்.''

''நான்தான் சார் என் நண்பன் சார்பில் சாரி சொல்லணும். அவன் ஒரு மடையன். ஏதோ அவசரத்திலேயும், பயத்திலேயும் உங்க பொண் ஸ்கூட்டரிலிருந்து விழறதைப் பார்த்துட்டுக் கோழை மாதிரி ஓடிட்டான்.''

அவன் பேச்சை நிறுத்தியபோது அறையில் ஒரு மௌனம் அடர்த்தியாகப் பரவி இருப்பது புரிந்தது. நந்தா கண்களை மூடிக் கொண்டாள். மெல்லிய உடல் நடுங்கியது.

இதோ நந்தா ஸ்கூட்டரில் வந்துகொண்டிருக்கிறாள். அவளுக்கு ஸ்கூட்டரில் செல்வது மிகவும் பிடிக்கும். அம்மாவின் எதிர்ப்பையும் மீறிக்கொண்டு இந்த ஸ்கூட்டரை வாங்கிக் கொண்டிருந்தாள்.

அந்தத் திருப்பத்தில் அவள் ஸ்கூட்டர் வரும்போது தான் எதிர்ப்புறத்தில் இருந்து ஒரு மோட்டார் பைக் வந்து கொண்டிருந்தது. எதற்காக இவன் தப்பான பக்கத்தில் வருகிறான் என்ற எரிச்சலுடன், அவள் தன் வண்டியைத் திருப்பும் போது, அவனும் அதே திசையில் தன் வண்டியைத் திருப்ப முயல..

நந்தா தூக்கி எறியப்பட்டாள். ஸ்கூட்டர் 'அம்போ' என்று கொஞ்ச நேரம் திகைப்புடன் நின்றுவிட்டுப் பிறகு படபடவென்று அழுதுகொண்டு, கீழே படுத்துப் புரள, நந்தா எரிச்சல் எந்தெந்தப் பகுதிகளில் ஏற்

படுகிறது என்றுகூட உணர முடியாத நிலைக்குப் போய்க் கொண்டிருந்தாள்.

பின்னர் நந்தா விழித்தபோது, தன் வீட்டிலேயே வந்து இருப்பது புரிந்தது. கைகளை அசைக்க முயன்றாள், முடியவில்லை.

வலது காலில் உலகத்தையே பிடித்துக் கட்டிப் போட்டது போன்ற உணர்ச்சி!

''நந்தா...'' — அப்பாவின் குரல் கேட்டது.

''எப்படியம்மா இருக்கு?''

யாரோ ஒரு இன்ஸ்பெக்டர் அவள் அருகில் குனிந்தார். ''மேடம்... உங்க ஸ்கூட்டரில் மோதி விட்டுப் போனவர் யார் ஞாபகம் இருக்கா?''

அவள் யோசிக்க முயன்றாள். ரொம்பவும் கஷ்டமாயிருந்தது. உதட்டைப் பிதுக்கினாள்.

நந்தா கண்களைத் திறந்தாள். மூர்த்தி இவளையே பார்த்துக் கொண்டிருப்பது தெரிந்தது. அப்பா எங்கேயோ பார்த்துக்கொண்டு நின்றார்.

''யெஸ் மேடம்... பயந்துபோய் ஓடிவந்தவன் இத்தனை நாள் பைத்தியக்காரன் மாதிரி இருந்தான். நான் போன வாரம்தான் விஷயம் என்னவென்று புரிஞ்சுகிட்டேன். அவன் என் கையைப் பிடிச்சுக் குழந்தை மாதிரி அழுதான்....''

''அவருக்கு எப்படி என் விலாசம் தெரிந்தது?''

''அதைக் கண்டுபிடிக்கத்தான் ஒருவாரம் ஆச்சு. எப்படியோ துப்பறிஞ்சு...''

''அ...டேயப்பா!''

குழந்தை மாதிரி நந்தா சிரித்தாள். நந்தா இது மாதிரி சிரித்து இரண்டு மாதங்கள் ஆகி விட்டனவே!

''டாக்டர் என்ன சொல்கிறார் ஸார்?''

நந்தா தானாகவே பதில் சொன்னாள்:

''என்ன சொல்வார்? குணமாகிவிடும் என்று எல்லோரையும் ஏமாற்றுகிறார்...''

''நோ மேடம்... கண்டிப்பாக நீங்கள் நடக்கப் போகிறீர்கள். ஸ்கூட்டர் ஓட்ட...''

''ஸ்கூட்டர் பேரை இனிமேல் சொல்லவே சொல்லாதீர்கள், தயவு செய்து...'' — அம்மாவின் குரலில் ஒரு கலக்கம் இருந்தது.

நந்தா மெல்லச் சிரித்தாள்.

''மிஸ்டர் மூர்த்தி... நீங்கள் நிஜமாகத்தான் சொல்கிறீர்களா?'' — அவள் குரலில் புதிய ஆர்வம் இருந்தது.

''கண்டிப்பா! என்னுடைய பிரார்த்தனைக்காகவாவது உங்கள் கால் குணமாயிடும்.''

அவள் அவனுடைய வார்த்தைகளின் பரிவால் இதயம் இதம் பெற்றது போல் கண்களை மூடி ரசித்தாள்.

மூர்த்தி எழுந்து கொண்டான்.

''சோ... மேடம்... உங்களுக்கு என் நண்பன் மேல் கோபம் கிடையாதா?''

''நோ...நெவர்... முடிந்தால் அவரை இங்கே ஒரு தடவை வரச் சொல்லுங்கள்.''

''சார், உங்களுக்கும் என் நண்பன் மேல் வருத்தமோ, எரிச்சலோ கிடையாதா?''

''இருந்தது. ஆனால் இப்போது இல்லை. நந்தாவே அவரை மன்னித்து விட்டாள். எனக்கென்ன கோபம்?''

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

## வம்பன் வெங்கு *

நெடுஞ்செழியன்: தமிழக அரசு நிதிநிலை திருப்தி

வெங்கு: ஆனால் தமிழக அரசு மக்கள் நிதிநிலை அதிருப்தி

செய்தி: குமரிக்கண்டம் சினிமா வீண் செலவு

வெங்கு: கண்டம் சினிமாவிற்கும் கண்டனமா?

பா.ரா.: ஜனதா இனிமேல் தேறுது

வெங்கு: பேராசிரியர் 'பரா'வை இனி டாக்டர் பா.ரா. என அழைக்கலாம்.

செய்தி: முப்பத்திரண்டு இனிப்புகளுடன் லட்சத் தீவில் பிரதமருக்கு விருந்து

வெங்கு: ஒரு பல்லுக்கு ஒரு 'ஸ்வீட்' லட்சத் தீவை இனி பட்சணத் தீவு என அழைக்கலாம்.

மத்திய அமைச்சர்: நீதிபதி மாற்றம் சரிதான்

வெங்கு: ஆளுங்கட்சிக்கு 'சரிதாள்' போடாத நீதிபதியை மாற்றுவது சரிதானே?

செய்தி: ஒரு எல்.ஐ.சி. ஊழியரின் சம்பளம் ரூ 3412/-

வெங்கு: எல்.ஐ.சி. யாருடைய ஆயுளுக்குப் பாதுகாப்பு அளிக்கிறது என்பது இப்போதுதான் புரிகிறது.

செய்தி: கடும் மழையினால் ஜனாதிபதியின் காஷ்மீர் பயணம் ரத்து

வெங்கு: அரசுக்குப் பயணச் செலவுகளை மிச்சப்படுத்த ஆண்டவன் அடிக்கடி இப்படி மழை பொழிவானாக!

செய்தி: நாட்டின் தலைமையைக் குறை கூறுவது பற்றி இந்திரா கடும் தாக்கு

வெங்கு: அதுதானே... ஓட்டுப் போட்டவர்களைத் தானே குறை கூற வேண்டும்!

# கராத்தே பயிற்சி – 25

பயிற்சியாளர்: டோனி பொன்னையா
தயாரிப்பு: குண்டுமணி
சித்திரம்: ராஜ்



## நிழல் சண்டை (தொடர்ச்சி)

8. இடது கால் முன்வைத்து இடது கையால் குத்துதல் 9. வலது கால் முன்வைத்து வலது கையால் குத்துதல் 10. பின்புறமிருக்கும் இடது காலை வலது புறம் திருப்பி வைத்து இடது கையால் தடுத்தல். 11. வலது காலை முன்வைத்து வலது கையால் குத்துதல். 12. வலது காலைத் திருப்பி இடதுபுறம் வைத்து வலது கையால் தடுத்தல். 13. இடது காலை முன் வைத்து இடது கையால் குத்துதல். 14. இடது காலை இடதுபுறம் திருப்பி முன்புறம் தடுத்தல்.

---

''சார்... யூ ஆர் கிரேட்! நீங்கள் எல்லோரும் சாதாரண மனிதப் பிறவிகள் என்றே தோன்றவில்லை!''

**''மி**ஸ்டர் மூர்த்தி... ஐ ஷுட் டெல் யூ ஒன் திங்... ஃப்ராங்க்லி, உங்களோட பழக்கத்தினால்தான் நந்தா இவ்வளவு தூரம் குணமாயிருக்கான்னு நம்பறேன்!''

''ஓ. தேங்க்ஸ்!'' – மூர்த்தி உணர்ச்சி வசப்பட்டான்.

மூர்த்தி ஒவ்வொரு நாளும் வந்தான் – அநேகமாக. கிட்டத்தட்ட ஒன்றரை மணி நேரம் அவன் அருகிலேயே உட்கார்ந்து கொண்டு பேசுவான். எதைப் பற்றியும், எல்லாவற்றைப் பற்றியும்! அப்படி. தப்பித் தவறி அவன் என்றாவது வர முடியாமல் போனால் அவன் துடித்துப் போவான்.

அன்றும் அப்படித்தான் வந்தான். வழக்கம்போல் அவனை நாற்காலியில் உட்கார வைத்துத் தள்ளிக் கொண்டு போய், தோட்டத்தில் நிறுத்தினான். முன்னால் இருந்த நாற்காலியில் அமர்ந்து கொண்டான்.

கொஞ்ச நிமிடங்கள் அமைதியாய் ஓடின.

''ஏன் ஒன்றும் பேசவில்லை, நந்தா?''

நந்தா தன் மெல்லிய கண்களைப் படபடத்தான். மனத்தில் ஒரு நடுக்கம்....''

''நடுக்கமா? என்னத்துக்கு?''

''நாளைக்கு முடிவு தெரியப் போறது – நான் நிரந்தர நொண்டியா இல்லையான்னு!''

''ஓ.... நந்தா, இதுல என்ன நடுக்கம்? கண்டிப்பா உனக்கும் கால் வரப் போறது! எல்லோருடனும் நீயும் நடக்கப் போறே!''

தன் முகத்துக்கு அருகில் தெரிந்த அந்த வாலிபனின் முகத்தையே பார்த்தான். அதை அப்படியே வாரி அணைத்துக் கொள்ள வேண்டும் போல இருந்தது. ''மூர்த்தி, ஒருவேளை நான் நொண்டியாகவே போனாலும் என்னை ஏத்துப்பீங்களா?'' என்று நாத் தழுதழுக்கக் கேட்டான்.

அவன் அவன் அருகில் வந்து நின்றான்.

''நந்தா, நான் உனக்குச் செய்த துரோகம் தெரியுமா?''

''துரோகமா?''

சக்கர நாற்காலி இப்போது தோட்டத்தை விட்டு வீட்டின் காம்பவுண்டுச் சுவருக்கு அருகில் வந்தது.

''நந்தா... அதோ தெரியுதே மோட்டார் சைக்கிள்... ரொம்ப நாள் கழிச்சு இன்னிக்குத்தான் அதை வெளியே எடுத்தேன். அதை ஞாபகம் இருக்கா....?''

அவன் நாற்காலியில் இருந்து சற்றே குனிந்து வாகனத்தைக் கவனித்தான்.

அதே மோட்டார் பைக்! சட்டென்று ஞாபகம் வந்து விட்டது. இதேதான்! இதே தான். அவன் ஸ்கூட்டரில் வந்து மோதியது; அவனைத் தூக்கி எறிந்தது; அவனை நொண்டியாக்க முயன்றது....

அவன் திரும்பி அவனைப் பார்த்தான்.

''நந்தா இப்போது சொல்லு... உனக்கு எமனு வந்த இந்த மோட்டார் பைக் என்னோடதுதான். அன்னிக்கு ஓட்டி வந்ததும் நான்தான். என் நண்பன்னு நான் சொன்னதெல்லாம் கதை....'' அவன் பேசாமல் அவனையே பார்த்துக் கொண்டிருந்தான்.

''சொல் நந்தா...இப்போது சொல்லு! இன்னுமா என்னை விரும்பறே?''

அவன் மெதுவாக முணு முணுத்தான்.

''மூர்த்தி! அந்த ஸ்கூட்டருக்கு நான்நன்றி சொல்லணும்னு என்ன செய்யணும்?''

பல்வேறு அலுவல்கள் நிமித்தம் நகரின் அங்குமிங்கும் அலைய நேரிட்டபோது ஒரு நிமிடம் கவனத்தைக் கவர்ந்தவை.

● 6.1.81 அன்று மாலை சென்னை வானொலி நிலையம் அருகே நின்றிருந்தபோது சாலையில் சென்று கொண்டிருந்த பல்லவன் போக்கு வரத்துக் கழகத்துக்குச் சொந்தமான லாரி ஒன்றின் நெற்றியில் 'பட்டைப் பிரிவு' என்ற போர்டு காணப்பட்டது. 'பட்டறைப் பிரிவு' இப்படிப் பட்டைப் பிரிவாகி விட்டதோ?

● இராயப்பேட்டை மருத்துவ மனைக்கு எதிரில் அமைந்த "Indian Bank" அறிவிப்புப் பலகையில் ஒரு "N" கீழே விழுந்துவிடவே அது இப்போது Idian Bank எனக் காட்சி அளித்துக் கொண்டிருக்கிறது.



● 'மதராஸ்' சென்னை என்றும் 'கார்ப்பரேஷன்' மாநகராட்சி என்றும் மாறிப் பல வருடங்களாகியும் இன்னும் பல மாநகராட்சி மருந்தகங்களில் அறிவிப்புப் பலகைகள் 'மதராஸ் கார்ப்பரேஷன் டிஸ்பென்சரி' என்று அந்தக் காலத்தில் எழுதப் பட்ட போர்டுகள் காட்சி அளித்துக் கொண்டிருக்கின்றன.

● 'பீட்டர்ஸ்ரோடு' என்பது Petters Road, என அந்த ரோடின் முனையிலுள்ள அறிவிப்புப் பலகையில் எழுதப்பட்டுள்ளது.

● கன்னிமாரா நூலகத்தில் புத்தகங்களைத் திருடியதாகவும், சே...ப்படுத்தியதாகவும் காவல் நிலையத்தில் ஒப்படைக்கப்பட்டவர்களின் பெயர்கள் முகவரியுடன் எழுதப்பட்டு வாசலில் தொங்கவிடப்பட்டுள்ளது. கடந்த ஆண்டு இத்தகைய குற்றம் புரிந்த ஐவரில் ஒருவர் பி. காம் படிக்கும் கல்லூரி மாணவர். அவர் படிக்கும் கல்லூரியின் பெயரை அறிந்துகொள்ள ஒரு கிளுகிளு: அண்மையில் ஒரு விபத்தில் மரணமடைந்த மலையாள நடிகர் பெயருக்கும் அந்தக் கல்லூரி பெயருக்கும் வித்தியாசம் ஒரு எழுத்துத்தான்!

● நடிகர் பாலாஜி எழும்பூரில் உள்ள தம் வீட்டின் முன்புறத்தில் நான்கு மாடிக் கட்டிடம் ஒன்றைக் கட்டியிருக்கிறார். இந்தியன் ஓவர்சீஸ்வங்கியும் ஒரு இன்ஷியூரன்ஸ் நிறுவனமும் தற்போது அங்கே குடி புகுந்துள்ளன.



● ஐஸ் ஹவுஸ் போலீஸ் ஸ்டேஷன் அருகே அமைந்த நியாய விலைக் கடையின் முன் நிற்கும் 'க்யூ'வை ஒழுங்கு படுத்த அவ்வப் போது போலீஸ் காவல் தேவைப்படுகிறதாம். நம் நாடு இந்நிலைக்கு வந்து விட்டதே என்று எண்ணும்போது ஆறுதல் அளிக்கும் ஒரு காட்சி. நுங்கம்பாக்கம் முனையில் உள்ள ஒரு கடையின் முன்னே – மாலை வேளைகளில் தினமும் எக்கச்சக்கமான கூட்டம். கார் ஸ்கூட்டர் சகிதமாக. அந்தக் கடையில் அப்படி என்ன வியாபாரம்? வேறொன்றுமில்லை. மது வியாபாரம்தான்.

● 42 எண் பஸ்ஸில் ஒரு ஜோக். செம்பியம் காவல் நிலையம். டிக்கட் வழங்குவதற்காக பஸ்ஸை அதிக நேரம் கண்டக்டர் காலதாமதமாக்கவே பொறுமை யிழந்த ஒரு பயணி, "கண்டக்டர் அந்த விசிலைக் கொஞ்சம் கொடுப்பா" என்று கூற அதற்குக் கண்டக்டரின் பதில்: "இருக்கிறது ஒரு விசில். அதை உங்களிடம் கொடுத்திட்டு நான் என்ன பண்றது?" -யெம்ஜி

● சென்னை ஆழ்வார்ப் பேட்டை ஓட்டல் ஒன்றில் பணியாளராக வேலைசெய்யும் கணேசன் வரைந்த படம் கீழே. 'இன்றைய ஸ்பெஷல்' என்று டிபன்–சாப்பாட்டு மெனுவைக் கரும்பலகையில் எழுதிய கையோடு, கீழே இவர் வரையும் சித்திரங்கள் போவோர் வருவோரையெல்லாம் ஒரு நிமிஷம் நின்று பார்க்கச் செய்கின்றன. கணேசனுக்கு 32 வயதாகிறது. அரியலூர்க் காரர். -விஸ்வம்



# "தாய்மார்கள் தேவை"

சென்னையில் இயங்கி வரும் எஸ் ஓ எஸ் (SOS) குழந்தைகள் பராமரிப்பு இல்லங்களுக்கு **"தாய்மார்கள்"** தேவைப்படுகிறது. இந்த சிறுவர் கிராமத்திலுள்ள ஒவ்வொரு வீட்டிலும் 9 குழந்தைகள் அன்புடனும், பாசத்துடனும் **"தாய்மார்களால்"** பேணி வளர்க்கப்பட்டு வருகிறார்கள்.

குடும்ப ஈடுபாடு, மற்ற பொறுப்புக்கள் இல்லாதவர்களும், குழந்தைகளை நன்கு அன்புடன் பராமரிக்கக் கூடிய தகுதி உடையவர்களும், தாய்மைக்காக ஏங்கும் தன்னலமற்ற பெண்கள் **"தாய்மார்கள்"** பணிக்கு தங்கள் வயது, கல்வி, முன் அனுபவம், குடும்ப சூழ்நிலை முதலியவைகளை குறிப்பிட்டு கீழ்க் கண்ட முகவரிக்கு உடனே விண்ணப்பிக்கவும். விண்ணப்பக் கவரில் **"எஸ் ஓ எஸ் குழந்தைகள் கிராமங்கள்"** என்று குறிப்பிடவும்.

தபால் பெட்டி 331

**மவுண்ட் ரோட்**

**சென்னை - 600 002**

---

**உபரியாக செலுத்திய வரியை திரும்பக் கோருங்கள்**

**நீங்கள் உபரி வருமான வரி செலுத்தியிருந்தால் உபரித் தொகையை திருப்பிப் பெற முடியும் முக்கியமாக நீங்கள் ;-**

கீழ்க் காணுபவற்றின் மூலம் வருவாய் பெறுபவராக இருந்தால் :

- **டிவிடென்ட்**
- **வட்டி**
- **வருவாயிலிருந்தே வருமான வரிப் பிடித்தம் செய்யப்படும் வேலை**

மேலும், உங்களது மொத்த ஆண்டு வருமானம், வரி விதிப்புக்குட்படக் கூடிய குறைந்த பட்சத் தொகையைக் காட்டிலும் குறைவானதாக இருந்தால், ஃபாரம் எண் 30ல் வருவாயிலிருந்தே பிடித்தம் செய்யப்பட்ட தொகையை திரும்பிப் பெற விண்ணப்பித்துக் கொள்ளலாம்.

ஆயினும், பணம் இரும்பிப் பெறக் கோரப்படுவதற்குரிய கணக்கீடு ஆண்டின் கடைசி நாள் முடிந்து, இரண்டு வருடங்களுக்குள் பணத்தை திரும்பிப் பெறுவதற்கான கோரிக்கை சமர்ப்பிக்கப்பட்டு விட வேண்டும். ஒரு எடுத்துக் காட்டு கணக்கீட்டாண்டு 1980-81 (1979-80ல் வருவாயிலிருந்தே பிடித்தம் செய்யப்பட்ட வரித் தொகை) க்கான வரி திரும்பிப் பெறுவதற்கான விண்ணப்பம், 1983 மார்ச் 31 அல்லது அதற்கு முந்தின தேதியில் சமர்ப்பித்து விடப்பட வேண்டும்.

**குறிப்பு :** உங்களது வருமானம், வரிக்குரியதல்லவெனில் வருமானத்திலிருந்து வரிப் பிடித்தம் செய்யப் படாமலிருப்பதற்காக, உங்கள் வருமான வரி அதிகாரியிடமிருந்து சான்றிதழொன்றையும் கோரலாம்.

வெளியிட்டவர் :

**டைரக்டர் ஆஃப் இன்ஸ்பெக்ஷன்**

(ரிசர்ச், ஸ்டாடிஸ்டிக்ஸ் & பப்ளிகேஷன்)

இன்கம் — டாக்ஸ் டிப்பார்ட்மெண்ட்,

புது டில்லி - 110001

டி.ஏ.வி.பி. 80/411

## திருமுருக கிருபானந்தவாரியார்

நிடத நாட்டின் தலைநகரமாகிய மாவிந்த புரத்தில் ஒப்பாரும் மிக்காரும் இன்றி சந்திர குலத் தோன்றலாகிய நளச் சக்கரவர்த்தி இந்திரனைப் போல் அரசு புரிந்தான். இவனது பெருமை திசை எட்டும் பரவி நின்றது. வாள் வலியும், தோள் வலியும் மிகுந்து வெண் கொற்றக் குடையின் கீழ் செங்கோல் தாங்கி, சீரும் பேரும் ஓங்கி, மாட்சியுடன் ஆட்சி செய்து கொண்டிருந்தான்.

ஒரு நாள் மாலை நந்தவனம் சென்று தாமரை வாவிக் கரையில் மரகதம் போன்ற பசும்புல் தரையில் உலாவிக் கொண்டிருந்தான். தாமரை மலரில் வீற்றிருந்தமின்னொளி போல் பொன்னொளி வீசும் அன்னத்தைக் கண்டு வியந்தான்.

அந்த அன்னம், ''மன்னவனே! என்னைக் கண்டு வியக்கின்றனையே! விதர்ப்ப நாட்டில் வீமராஜன் பெற்ற தமயந்தி என்ற அன்னம் என்னைவிடக் கோடி மடங்கு அழகுடையவள்'' என்று தமயந்தியின் பெருமையை நளனிடம் கூறியது. அவனுடைய வேண்டுகோளுக்கு இணங்கித் தமயந்தியிடம் தூது போய், நளனுடைய அருமை பெருமைகளைத் தமயந்திக்கு எடுத்துக் கூறிக் காதல் தீயை மூட்டி தமயந்திக்கும் நளனுக்கும் திருமணம் நிகழுமாறு செய்தது. இதற்குக் காரணம் வருமாறு:

இமய மலையில் அடர்ந்த நெடிய காடு மக்கள் அணுக முடியாததாக இருந்தது. அக்காட்டில் சிங்கம், புலி, கரடி முதலிய கொடிய விலங்குகள் பகலிலும் இரவிலும் இரை தேடி உலாவிக் கொண்டிருக்கும்.

அந்த வனத்துக்கு நடுவில் வானளாவிய மலைக் குகையில் ஆருகன் என்ற வேடனும், ஆருகி என்ற அவன் மனைவியும் வாழ்ந்து கொண்டிருந்தார்கள். அவர்கள் உடலும் உயிரும் போல, நகமும் சதையும் போல ஒற்றுமையாக இருந்தார்கள். ஆருகன் வேட்டையாடிக் கொன்ற விலங்கின் இறைச்சியைத் தீயில் வேக வைத்து, தேன் கலந்து மனைவியும் தானும் உண்பான். வேட்டையாடும்பொழுது இளம் விலங்குகளையும், நோய்வாய்ப்பட்ட விலங்குகளையும் வயது முதிர்ந்த விலங்குகளையும் கொல்ல மாட்டான்.

அந்த வழியே வருகின்ற வழிப்போக்கர்களுக்கு உணவு கொடுத்து வழிகாட்டி உதவி புரிவான். காலையும் மாலையும் சிவமூர்த்தியை நினைந்து அன்பு செய்வான்.

ஒரு நாள் மாலை ஆறு மணி அளவில் காமாதி அறு பகையும் வென்ற ஒருதவ முனிவர் அங்கு வந்து சேர்ந்தார். ஆருகன் அவருடைய அடிமலர் மீது வீழ்ந்து வணங்கினான். ''அடிகளாரே! இந்த வனம் விலங்குகள் வாழுகின்ற கொடிய வனம். பல மணி நேரம் நடந்தால்தான் இந்த வனத்தைக் கடக்க முடியும். இப்பொழுதோ மணி ஆறு. இன்னும் சிறிது நேரத்தில் இருள் சூழ்ந்துவிடும். விலங்குகள் தங்களைக் கொன்றுவிடுமே! ஆபத்தான இடம். நான் வாழுகின்ற குகைக்கு வாருங்கள்'' என்று அன்புடன் கூறித் தனது குகைக்கு அழைத்துக் கொண்டு சென்றான்.

ஆருகி அருந்தவ முனிவரைக் கண்டு அன்புடன் அஞ்சலி செய்தாள். புலித் தோலை விரித்து முனிபுங்கவரை அமரச் செய்து அவருடைய பாத மலர் மீது சீத மலர்களைத் தூவினாள். தேனும், செழுங் கனிகளும் தந்து பசியாற்றினாள். முனிவர் அந்த வேடத் தம்பதிகளை மகனும், மருமகளுமாகப் பாவித்து மதுர மொழிகள் கூறி, ஆன்மா ஈடேறக் கூடிய தத்துவ உபதேசங்களைப் புரிந்தார். இரவு பத்து நாழிகை கடந்தது.

அவர்கள் இருந்த குகை இருவர் மட்டுமே தங்கக் கூடியதாகக் குறுகியதாக இருந்தது.

*The following particulars regarding the ownership of 'KALKI' the Tamil weekly newspaper, are published, as called for by Rule 8 of the Registration of Newspapers (Central) Rules 1956.*

FORM IV

1. *Place of Publication*: Madras
2. *Periodicity of publication*: Weekly
3. *Name of Printer*: V. Murali
   *Nationality*: Indian
   *Address*: AA-117, Shanthi Colony
   Anna Nagar
   Madras-600 040
4. *Name of Publisher*: V. Vaidyanathan
   *Nationality*: Indian
   *Address*: 6-A, Warren Road,
   Madras-600 004
5. *Name of Editor*: K. Rajendran
   *Nationality*: Indian
   *Address*: 1, Purushothama Mudaliar Rd.
   Lake Area
   Nungambakkam
   Madras-600 034
6. *Names and addresses of individuals who own the newspaper and partners or shareholders holding more than one per cent of the total capital*:
   Bharathan Publications Private Limited
   84/1-C, Race Course Road, Guindy,
   Madras-600 032

V. Vaidyanathan
*Publisher*

1-3-1981

அதில் மூவர் தங்க இயலாது. வேடன் தனக்குள் சிந்திப்பானாயினன். "நாமும் நமது மனைவியும் குகைக்குள் இருந்து முனிவர் வெளியே இருந்தால் விலங்குகளால் முனிவர் கொல்லப்படுவார். முனிவரும் நாமும் உள்ளே படுத்து நமது மனைவி வெளியே இருந்தால் அபலையாகிய அவளும் விலங்குகளால் கொல்லப்படுவாள். அதனால் முனிவரும் மனைவியும் உள்ளே படுக்க, நாம் ஆயுதபாணியாக வெளியே இருக்க வேண்டும். இதையன்றி வேறு வழியில்லை" என்று எண்ணினான்.

"குருநாதா! கொடிய விலங்குகள் இரவில் இரை தேடி உலாவும். தாங்கள் வெளியே இருக்கக் கூடாது. இவள் தங்கள் புதல்வி. அப்பாவும் மகளும் தனிமையாக இருக்கலாம். ஆகவே என்னுடைய வேண்டுகோளைப் புறக்கணிக்காமல் நீங்கள் இருவரும் உள்ளே சயனித்துக்கொள்ளுங்கள்" என்று கூறி அவர்கள் இருவரையும் உள்ளே சயனிக்கச் செய்து கதவைத் தாளிட்டுக் கொண்டு வில்லேந்திய கையுடன் வேடன் வெளியே நின்றான்.

குகைக்குள் ஆகுகி ஒருபுறம் திரும்பிப் படுத்துக் கணவருடைய திருவடியை சிந்தை செய்துகொண்டே தூங்கி விட்டாள். ஐந்து புலன்களையும் அவித்த அருந்தவ முனிவர் அஞ்செழுத்தை நெஞ்சழுத்திக் கண் மூடி உறங்கி விட்டார். அவர்கள் உள்ளத்தில் ஆபாசம் என்பது அணுவளவும் இல்லை.

இரவு 15 நாழிகை. எங்கும் இருள் சூழ்ந்திருந்தது. வேடன் குன்றின் மேல் சாய்ந்து நின்றான். அவனை உறக்கம் தழுவியது. கையிலிருந்த வில் கீழே விழுந்து விட்டது. பசியுடன் இரை தேடி வந்த கொடிய சிங்கம் அவனைக் கொன்று ஒரு பகுதியைத் தின்றுவிட்டுச் சென்றது.

பொழுது புலர்ந்தது. ஆகுகியும், அருந்தவ முனிவரும் கதவைத் திறந்து வெளியே வந்தார்கள். சிங்கத்தால் கொல்லப்பட்டு எலும்புக்கூடாக இருந்த உத்தம வேடனைக் கண்டு திடுக்கிட்டார்கள்.

ஆகுகி, "என் அன்புத் தெய்வமே! ஆருயிர்க் கணவரே! உத்தம குண சீலரே! என்னிடம் தாங்கள் ஒரு நாள் கூட கோபித்ததில்லை. வந்தவர்க்கெல்லாம் உணவும், இருப்பிடமும் தந்து உதவி செய்தீரே! தாங்கள் அகால மரணம் அடைந்தீரே! தங்களைப் பிரிந்து நான் வாழ்வேனோ! தாங்கள் சென்ற உலகுக்கு நானும் வருகிறேன்" என்று கூறி அழுது உள்ளம் வெந்து, நொந்து கணவன் மீது விழுந்தாள். அவள் உயிர் பிரிந்து சாந்தி அடைந்தாள்.

இதைக் கண்ட முனிவரின் கண்களில் கண்ணீர் ஆறாகப் பெருகியது. "அந்தோ! நம்மால் இந்த இரண்டு சுத்த ஆன்மாக்கள் இருவரும் மடிந்து விட்டார்களே! பாவியாகிய நான் வரவில்லையானால் இவர்கள் பல்லாண்டு வாழ்ந்திருப்பார்களே. இந்தப் புண்ணியவதி பெற்ற மகளைப் போல் எனக்குப் பழமும் பகந்தேனும் கொடுத்துப் பசியாற்றினாளே! இளமையான மனைவியுடன் ஒருசிறிதும் களங்கமின்றி என்னை உள்ளே படுக்க வைத்து வெளியே தான் நின்று இந்த உத்தம வேடன் உயிர் துறந்தானே! இந்த நற்குணத் தம்பதிகள் நம்மால் மாண்டு ஒழிந்தார்கள்" என்று எண்ணிப் பெரிதும் புலம்பி அழுதார்.

அந்த இரண்டு சரீரங்களையும் தூய நீரால் ஆட்டி, காட்டு மலர்களைச் சூட்டி, ஓமத்தீ வளர்த்தி, உலர்ந்த கட்டைகளை அடுக்கி அந்த இரண்டு சரீரங்களையும் சிதையின் மேல் ஏற்றித் தீமூட்டினார்.

இரண்டு பிணங்களும் தீயில் வேகின்றதைக் கண்டு முனிவர் உள்ளம் வெந்து அந்தத் தீயில் தானும் ஏறிக் குதித்து விட்டார்.

அந்த ஆகுகன் என்ற வேடன் நளச் சக்கரவர்த்தியாகப் பிறந்தான். முனிவருக்கு உணவும், உறைவிடமும் தந்த புண்ணியத்தால் அரச பதவி கிடைத்தது. ஆகுகி என்றவள் தமயந்தியாகப் பிறந்தாள். அந்த முனிவர் அன்னமாகப் பிறந்தார். முற்பிறப்பில் தன்னால் பிரிந்த இருவரையும் தூது போய் ஒன்றுபட்டு வாழ உதவி புரிந்தார்.

# மேன்மையான பெண்மைக்கு மேன்மையான சுகம் தரும்

# ஹெலனா

## விஸ்கோஸ் இணைந்த சானிடரி டவல்கள்.

மாதத்தில் 30 நாட்களும் நீங்கள் அசதியை உணராமல் சுறுசுறுப்பாக இயங்க ஹெலனா உதவுகிறது. பட்டுப் போன்ற மிருதுவான மென்மையுடன், மிகவும் உன்னதமாகத் தயாரிக்கப்பட்ட சானிடரி டவல் ஹெலனா. மிகவும் நியாயமான விலையில். அன்னியோன்யமான பாதுகாப்பை அளிப்பது.

ஈரத்தை ஊடுருவ விடாது தடுக்கும் ஒரு விசேஷ, நீல வண்ணப் பரப்புடன் கூடியது. பாதுகாப்பு அளிப்பது. வசதி மிகுந்தது. விலையோ மிகவும் மலிவு. எல்லா கடைகளிலும் கிடைக்கும்.







சாகாட் இன்டஸ்ட்ரீஸ், 23, புரசைவாக்கம் நெடுஞ்சாலை, சென்னை-600 007.

## 17




இனி இதைப் பற்றி விவாதித்துக் கொண்டிருப்பதில் எந்தப் பயனுமில்லை. ராகுல் அவளை விட்டு நெடுந்தூரம் சென்றுவிட்டான்.

ராதிகா எழுந்தாள்.

''சரி.... நான் வருகிறேன். ராகுல், நீ உன் விருப்பப்படி எங்குவேண்டுமானாலும் இருக்கலாம். ஆனால் மாத்திரைப் பழக்கத்துக்கு மட்டும் அடிமையாகி விடாதே.''

''நீ எனக்கு அறிவுரை வழங்குவது வேடிக்கையாக இருக்கிறது.... நீ பலஹீனமடைந்து வருகிறாய் என்றுதான் இதற்கு அர்த்தம்'' என்றான் ராகுல்.

''ஆமாம். நான் உனக்கு அறிவுரை வழங்கும் நிலையில் இல்லை. உன் தந்தை ஓடிப்போனதற்கும் நான்தான் காரணம். நீ இன்று மாத்திரையில் சொர்க்கத்தைக் காண்பதற்கும் நான்தான் காரணம். நான் நடத்தை கெட்டவள், குடிகாரி, என்ன வேண்டுமானாலும் நினைத்துக் கொள்... ஆனால்....'' அவள் சொல்லி முடிப்பதற்குள் கல்லூரி முதல்வர் குறுக்கிட்டார்.

''ப்ளீஸ்... நான் குறுக்கிடுவதை மன்னியுங்கள்.... வாழ்க்கையில் சில அடிப்படையான நியதிகள் இருக்கின்றன. அவை எந்தக் காலத்துக்கும் பொருந்திய உண்மைகள். தொன்றுதொட்டு இருந்து வருகின்றன என்ற காரணத்தால் அவற்றைப் பின்பற்றுவது பத்தாம் பசலிப் போக்காக ஆகிவிடாது. எப்பொழுது நாம் குடும்பம், சமூகம் என்ற கருத்துக்களை ஏற்றுக் கொள்கிறோமோ அப்பொழுதே நம் சுதந்திர உணர்வுக்கும் வரையறை ஏற்பட்டு விடுகிறது. சிந்தனை செல்லும் வழியெல்லாம் வாழ முயல்வது, நம் உடம்பின் இரத்தம் உஷ்ணமாயிருக்கும் வரையில்தான். ஒவ்வொரு கால கட்டத்திலும், நம் வாழ்க்கையின் நோக்கங்களை மறுபரிசீலனை செய்ய வேண்டியிருக்கிறது என்பதுதான் காலம் நமக்குச்செய்யும் கொடுமை. குடும்ப வாழ்க்கையின் அடிப்படை நியதிகளை ஏற்றுக் கொண்டு, சமூக வேலிக்குள் வாழ்கின்றவர்களுடைய கற்பனையற்ற சராசரித்தனம், ஒரு கால கட்டத்தில் ஒரு மன நிலையில் நமக்கு எரிச்சலைத் தருவதில் ஆச்சரியமில்லை..... ஆனால்இதுதான் சௌகரியமான வாழ்க்கை என்று புரிந்து கொள்வது தான் விவேகம். நான் உங்களுக்கு அறிவுரை கூறுவதாகத் தயவு செய்து நினைத்துக் கொள்ளாதீர்கள். என் மனத்தில் பட்டதைச் சொன்னேன், அவ்வளவு தான்.''

''நன்றி'' என்று சொல்லிவிட்டு அவ்வறையை விட்டு வெளியேறினாள் ராதிகா.

'இதுதான் சௌகரியமான வாழ்க்கை என்று புரிந்துகொள்வதுதான் விவேகம்!' எவ்வளவு வாஸ்தவமானது! சராசரியாக இருப்பதுதான் மிகவும் கஷ்டமானது. இயல்பாகவே அப்படி இருப்பவர்கள் கொடுத்து வைத்தவர்கள். வாழ்க்கையில் எத்தனையோ பரிசோதனைகள் செய்த பிறகு இப்படி சராசரியாக இருந்து விடுவதுதான் விவேகமானது என்று புரிகின்றது....

அவள் வீட்டுக்குச் சென்றபோது அருண் ஹாலில் உட்கார்ந்திருந்தான். அவன் சிகரெட் குடித்தவாறு ஏதோ யோசனையில் ஆழ்ந்திருந்தான். அவளைக் கண்டதும், ஒரு கணம் ஏற இறங்கப் பார்த்துவிட்டு, மறு படியும் சிந்தனையில் ஆழ்ந்து விட்டான்.

ராதிகா அவன் எதிரில் உட்கார்ந்தாள். அவனும் ஒரு



சிகரெட்டைப் பற்றவைத்துக் கொண்டான்.

''மத்தியானம் நான் அப்படிப் பேசியிருக்கக் கூடாது.... ஐ ஆம் ஸாரி...''

அருண் பேசாமலிருந்தான்.

''நான் ராகுலைப் பார்த்துவிட்டு வரேன்... இனிமே அவனுக்கு என் உதவி தேவையில்லே....''

அருண் கண்களைச் சற்று இடுக்கிக்கொண்டு புருவங்களை உயர்த்தினான்.

ராதிகா எழுந்து சென்று விஸ்கி பாட்டிலையும் தம்ளர்களையும் எடுத்துக் கொண்டு வந்தாள்.

''யு வான்ட் எ ட்ரிங்க்?'' என்று கேட்டாள் அருணை.

''உன் பிரச்னை என்ன?'' என்றான் அருண்.

''நான்தான்....''

''வெல் ஸெட்... ஒவ்வொருவருக்கும்இதே தான் பிரச்னை. எனக்கு அருணாக இருக்கப் பிடிக்கவில்லை. உனக்கு ராதிகாவா இருக்கப் பிடிக்கலே.... ராகுலுக்கு ராகுலா இருக்கப் பிடிக்கல்லே... தப்பிச்சுக்கிறத்துக்காக என்னென்னமோவெல்லாம் செய்யறோம். எல்லாரும் ஒரே பொறியிலே அகப்பட்டுக் கொண்ட எலிகள்... இது யாருடைய குரூரமான ஹாஸ்யம், எனக்குப் புரியலே... லெட் மீ ஹாவ் எ ட்ரிங்(க்)....''

ராதிகா சோடாவை எடுத்துக்கொண்டு வந்தாள். சோடாவில் கலந்து விஸ்கியை



# எங்க ஊர் கண்ணகி



அவனிடம் நீட்டினாள். தன்னுடைய கிளாஸை ஒரே மடக்கில் குடித்தாள். மறுபடியும் ஊற்றிக் கொண்டாள்.

அருண் அவளை உற்றுப் பார்த்தான்.

சிறிது நேரம் கழித்துக் கேட்டான்: ''ராகுலுக்கு உன் உதவி தேவையில்லேன்னு என்ன அர்த்தம்?''

''அதான் அர்த்தம்... இதுவரையிலும் தனக்கு அப்பா இல்லேன்னு சொல்லிண்டிருந்தவன் இப்போ தனக்கு அம்மாவும் கிடையாதுங்கறான். என் பணம் அவனுக்குத் தேவையில்லையாம்....''

''படிப்பு?''

''அவன் ஒரு 'ட்ரக்-அடிக்ட்'டா ஆயிட்டான். இதைப் பத்திப் பேச அவனோட பிரின்ஸிபால் என்னைக் கூப்பிட்டனுப்பினார். என்னோட பேசினப்புறம்தான் அவருக்குப் புரிஞ்சுதாம், இந்த மாதிரி இருக்கிற அம்மாவுக்குப் பிறந்த பிள்ளை வேற எப்படி இருக்க முடியும்னு.. உடனே ராகுலை அவன் கிட்டேயிருந்தும், என் கிட்டேயிருந்தும் காப்பாத்தணும்னு ஒரு தீவிரம் அவருக்கு வந்துடுத்து. தன்னோட இருக்கியான்னு அவனைக் கேட்டார். அவனுக்கும் இதைப் பத்தி ஆட்சேபணை இருந்ததா தெரியலே... 'ஸோ தியர் ஐ ஆம்... எ ஃப்ரீ பேர்ட், ஸெலிப்ரேடிங் மை ஃப்ரீடம்....''

அவள் இரண்டாவது தம்ளரையும் காலி செய்தாள்.

இவள் தன் சுதந்திரத்தைக் கொண்டாடுகிறாளா? அல்லது அதைக் கண்டு பயப்படுகிறாளா? ராகுலின் பிரிவு நிச்சயமாக அவளைப் பாதித்திருக்கிறது. இதுவரை அவள் ராகுலைப்பற்றி அவனிடம் பேசியது கிடையாது.

''நான் வேணும்னா நாளைக்குப் போய் ராகுலைப் பார்க்கட்டுமா? அவனோட பேசி...''

''எதுக்காக? மறுபடியும் அவன் மாத்திரை சாப்பிட ஆரம்பிக்கணுமா? பிரின்ஸிபாலோட அவன் சந்தோஷமா இருந்தா சரி.....''

''அவன் மாத்திரை சாப்பிட நீயா காரணம்?''

''எஸ்... நான்தான்... ஹி ஹேட்ஸ் மீ நோ தோம்.... இதுக்கு யார் காரணம்?''

''ஒரு வகையில் நானும் காரணம்....நீ ஒருவேளை தனியாக இருந்திருந்தால்....''

''ஒண்ணும் புரியல்லே. ஒவ்வொண்ணும் ஏன் நடக்கிறதுன்னு என்ன காரணம் சொல்ல முடியும்? விம்மி ஏன் உங்களை விட்டுப் போனா? ரமேஷ் என்னை விட்டு ஏன் போனான்? தாமோதரன் ஏன் இப்படிப் பொறந்திருக்கான்? தாமோதரனையும் விம்மியையும் சேர்த்து வச்சது எது? நம்மை ரெண்டு பேரையும் இந்தச் சமயத்திலே இந்த இடத்திலே குடிக்க வச்சிருக்கிறது எது? – இது எல்லாத்தையும் நம்மாலே தவிர்த்திருக்க முடியுமா? விதியோ, மண்ணாங்கட்டியோ, ஆர் வி நாட் டோட்டலி ஹெல்ப் லெஸ்?....'' என்று உணர்ச்சிவசப்பட்ட நிலையில் பேசிக்கொண்டே அவள் மூன்றாந் தடவையாகத் தன் தம்ளரை நிரப்பிக் கொண்டாள்.

**படம் பார்க்கும் முன் எதிர்பார்ப்புகள்:**

பாலசந்தர் படம். ஏதாவது புதுமையா இருக்கும். எல்லாரிடமும் நன்றாக வேலை வாங்கியிருப்பார். ஹை கிளாஸ் படமா இருக்கும். புத்திசாலித்தனங்கள் இருக்கும். ஆபாசம் இருக்காது. குறைந்த நடிகர்களை வைத்து நிறையச் சொல்வார்.

**படம் பார்த்த பின் எண்ணங்கள்:**

பாலசந்தரும் கிராமத்தில் பிரவேசித்திருக்கிறார். ஏ.பி.சி. எல்லாக் கிளாஸையும் அடையும் படம். ஏறத்தாழ ஒரு டஜன் கதா பாத்திரங்கள். அத்தனை பேரும் படம் ஆரம்பித்துக் கொஞ்ச நேரத்தில் நமக்குப் பரிச்சயமாகி விடுகிறார்கள். பாலசந்தரின் கைவண்ணம். படம் முடியும் தருவாயில் கேரக்டர்களில் சிலர் விழுந்து விடுகிறார்கள். சறுக்கும் டைரக்டர்.
இஸ்லாம் நாடுகளில் திருடினால் திருடிய கையை வெட்டிவிடுவார்கள். அதை நம்மூரில் சோதித்துப் பார்க்கும் நவீன எங்களூர் கண்ணகி சீமா. பாக்கிப் பணம் தர மறுத்தவன் முகத்தில் கொதிக்கும் எண்ணெயை ஊற்றுகிறார். பலாத்காரம் செய்ய வரும் ஆண்களிடம் தப்பிக்கப் புதிய ஐடியா தருகிறார். பயங்கர ஐடியா. நினைத்தாலே வலிக்கிறது.
குருடியாய்ப் பாந்தமான சரிதா (நீங்க யாருங்க, நீங்க யாருங்க) காதல் பேசும் ஆயுதங்கள் (கண்கள்) கொண்ட மாதவி. ஆபத் பாந்தவி பட்டபடார் சீமா. மூவரும் நடிப்பில் போட்டி. கடைசிக் காட்சியில் மூக்கை நீட்டி ஜெயிக்கும் சீமா.
வரும்போதெல்லாம் சிரிக்க வைக்கும் இங்கிலீஷ் பி.சி. 212 சரத் பாபு. (உங்களுக்கு இண்டியன் கான்ஸ்டிபேஷன் தெரியுமா?) கைத்தடியை ரஜினி ஸ்டைலில் சுழற்றி, அலட்டிக்காத விஜயன் ஜாடையில் உருவாகியிருக்கும் வில்லன் ஜீவாவைப் பத்தி என்ன நினைக்கிறே நாயினா?
அப்பா குடிச்ச சிகரெட்டை வாங்கி மகனும் புகைக்கிறான். ஓ.கே. நட்பு தெரிகிறது.
அப்பா கலைத்த பெண்ணை மகனும் அடுத்த நிமிடமே கலைக்கிறான். அசிங்கம். அவள் அம்மாவாயிட மாட்டாளா? பாலசந்தர் சார் புதுமை என்ற பெயரில் விபரீதக் கற்பனைகள் வேண்டாம்.
வில்லனைக் கொல்ல சீமா நாயை பிரெய்ன் வாஷ் பண்ணுவது விளையாட்டுத்தனமாக இருக்கிறது. சீமா, மாதவி, சரிதா மூவரும் ஆற்றில் நீராடும் போனஸ் காட்சியும் பாலசந்தர் தருகிறார்(!)
ஏராளமான மருந்துகளை ஒரே சமயத்தில் கலக்கிக் கொடுத்து நமக்கு வியாதி குணமாவதற்குப் பதில் கசப்புத்தான் அதிகம் தெரிகிறது.
மூன்றடி மேலே போய் இரண்டடி சறுக்கியுள்ள பாலசந்தர்.

—நளினி சாஸ்திரி

---

விம்மி கண் விழித்தபோது அறை வெளிச்சமாக இருந்தது. அவன் தூங்கும்போது இரவு மணி மூன்று இருக்கும்.

நேற்றிரவு நடந்த சம்பவங்கள் அவள் நினைவுக்கு வந்தன. தாமோதரன் உரக்கக் குரலெழுப்பிக் கத்திய பிறகு அவள் படுக்க வந்துவிட்டாள். உறக்கம் வரவில்லை.

தாமோதரன் மற்ற ஆண்களைப் போல் தானும் மிகவும் சாதாரண மனிதன்தான் என்று காட்டிக் கொண்டு விட்டான். 'என் உருவத்தை ரொம்ப நெருங்கிப் பார்க்கிறபோது உன்னுடைய அருவருப்பை உன்னாலே தவிர்க்க முடியல்லே' என்று அவன் நேற்று கூறியபோது அவன் எத்தகைய தாழ்வு மனப்பான்மையினால் கஷ்டப்படுகிறான் என்று அவளால் உணர்ந்து கொள்ள முடிந்தது. அவள் அவன் விருப்பத்துக்கு இசைய மறுத்ததற்கு இதுவா காரணம்? இதை ஏன் அவன் புரிந்து கொள்ளவில்லை? புரிந்து கொள்ளவில்லையா? அல்லது புரிந்துகொள்ள அவன் தயாராக இல்லையா?

நேற்றிரவு அவனைப் பார்க்கும்போது பரிதாபமாக இருந்தது. 'செக்ஸ்' அனுபவமே அவனுக்கு இதுவரை ஏற்பட்டிருக்காது என்றுதான் தோன்றுகிறது. ரீனா, கவிதா போன்றவர்களிடம் அவன் தன்னைப் பற்றி ஒரு வகையான 'இமேஜ்' உருவாக்கியிருந்தான். அவர்கள் அவனைத் தெய்வ ஸ்தானத்தில் வைத்து வழிபடுகிறார்கள். இரத்த ஓட்டமும் சதையும் உள்ள ஒரு சாதாரண மனிதன் என்று அவன் தன்னை அவர்களிடம் காட்டிக் கொள்ள விரும்பவில்லை. மனத்தடை ஏதுமின்றி இருக்க வேண்டும் என்று மற்றவர்களுக்கு உபதேசம் செய்யும் அவன் தன்னுடைய மனத் தடைகளைத் தனக்கு மட்டும் தெரிந்த ஓர் அந்தரங்கமாக வைத்துக் கொண்டு அவதிப்படுவது துர்ப்பாக்கியம் தான். 'பசி, தாகம் மாதிரி, 'செக்ஸ்' வெறும் உடல் தேவைதான்' என்று வாதிக்கும் அவன், தான் இத்தகைய உடல் தேவைகளுக்கெல்லாம் அப்பாற்பட்டவன் என்ற ஓர் இமேஜை உருவாக்கிக் கொண்டு கஷ்டப்படுவது வேதனைக்குரியது....

ரீனாவோ, அல்லது கவிதாவோ அவன் அவர்களிடம் தன் விருப்பத்தைத் தெரிவித்தால் அவர்கள் அதிர்ச்சி அடைவார்கள் என்பது ஒருபுறமிருந்தாலும், இசைவார்கள் என்பது என்ன நிச்சயம்? அவ்வாறு கேட்டு அவர்கள் மறுத்துவிட்டால் இது தன் உருவத்தைப் பற்றிய தீர்ப்பாகி விடுமே என்று அவன் பயப்படுகிறான்.

அவன் உருவத்தைப் பற்றி அவளுக்கு அருவருப்பில்லை என்று அவனுக்கு எப்படி நிரூபித்துக் காட்டுவது? செக்ஸ் அனுபவமே இல்லாமல் இறந்து போக இருந்த ஓர் இளைஞனுக்கு அவ்வனுபவத்தை உணர்த்துவதற்காகத் தன்னையே அதற்கு அர்ப்பணித்துக் கொண்ட பெட்ராண்ட் ரஸ்ஸலின் அம்மாவின் நினைவு அவளுக்கு வந்தது. அவளால் இதைச் செய்ய முடியுமா?

டாக்டர்! என் பொம்மைக் குழந்தைக்கு உடம்பு சரியில்லே. கொஞ்சம் பாருங்கோ.

ஜுரமில்லே. வயிற்றிலேதான் ட்ரபிள். உட்வர்ட்ஸ் கிரைப் வாட்டர் கொடு.

டாக்டர்! இந்த மழை காலத்திலே உட்வர்ட்ஸ் கிரைப் வாட்டர் கொடுக்கலாமா.

மழையோ கோடையோ குளிரோ எல்லாகாலத்திலும் குழந்தைகளின் பொது நலனுக்கு உட்வர்ட்ஸ் கிரைப் வாட்டர்.






100 ஆண்டுகளுக்கும் மேலாக
தாய்க்குலம் நம்புவது

# உட்வர்ட்ஸ் கிரைப் வாட்டர்

CAS/OPPL/3/80/TAM/C

அவளால் இதை நினைத்துக் கூடப் பார்க்க முடியவில்லை. ஊதுவத்தியின் மென்மையான நறுமணம்தான் நினைவுக்கு வருகின்றது. அவள் தன் கற்பனையின் விஸ்தரிப்பாகத் தாமோதரனுடன் கொண்டுள்ள உறவைக் காணும் போது. அவனை 'இன்டர் நாஷனல் சென்டரி'ல் சந்தித்தது. அவனுடன் பேசியதன் காரணமாக அவளுக்குள்ளிருந்த ஆற்றல் சிலிர்த்தெழுந்தது. அவனை ஓவியக் கண் காட்சியில் பார்த்தது. அவனுடன் இந்த வீட்டுக்கு வந்தபோது இருவரும் நிகழ்த்திய உரையாடல்கள் — எல்லாம் எத்தகைய நளினமான அனுபவங்கள்! இவற்றை அசிங்கப்படுத்த வேண்டியது அவசியம்தானா? 'செக்ஸ்' ஓர் அசிங்கமான விஷயமா? — ஒரு முடிவை நோக்கிச் செய்யப்படுகின்ற காரியம் எதுவாக இருந்தாலும் அவளைப் பொறுத்த வரையில் அது அசிங்கமாகத்தான் படுகிறது.

தாமோதரன் அவளிடத்தில் வேண்டுவது 'செக்ஸா'க இருந்தால், நன்றிக் கடனுக்காக அவன் விருப்பத்தை நிறைவேற்றிவிட்டு, அவனை விட்டு நீங்கிவிட வேண்டியதுதான்... அவள் மனத்தில் உருவகித்துக் கொண்டிருக்கும் தாமோதரன் வேறு... இவன் வேறு...

எல்லா ஆண்களும் அடிப்படையாகப் பார்க்கப் போனால், ஒருவருக்கொருவர் வித்தியாசமில்லாமல்தான் இருக்கிறார்கள். 'பெண் விடுதலை'யைப் பற்றி அன்று வாய் கிழிய இவன் பேசியதெல்லாம் இதற்குத்தானா? 'பெண் விடுதலை' என்பது ஆண்களைப் பொறுத்த வரையில் பெண்கள் யாரோடு வேண்டுமானாலும் எந்த விதமான மனத் தடையுமில்லாமல் உடல் உறவு கொள்வதுதான் போலிருக்கிறது....

அருணோடு இருந்த நாட்களை அவள் நினைத்துப் பார்த்தாள். அவனுக்கு அவளிடம் தீவிர ஆசை இருந்தது உண்மைதான்... இதைத் தெரிவிக்க அவன் அறிந்திருந்த ஒரே



அவன்: ''ஆமையைவிட மெதுவாக நடக்கக் கூடிய பிராணி ஏதுவும் இருக்காடா?''
இவன்: ''இருக்கு! நான் பணம் கட்டின குதிரை!'' -உ. ராஜாஜி

பாஷை 'செக்ஸ்'தான். விருந்து முடிந்து இரவில் எந்த நேரத்துக்குப் படுக்கப் போனாலும் மை காட்!... அவள் ஆட்சேபணையைப் பற்றி அவனுக்குக் கவலையே இல்லை.

'செக்ஸ்' என்றாலே ஒரு வெறுப்பு, அவளறியாமலே ஏற்படுவதற்கு இதுவும் ஒரு காரணமாக இருக்கலாம், பசிக்காத குழந்தைக்குச் சிறு வயதில் கட்டாயமாக உணவைத் திணித்துப் பிற்காலத்தில் அவை வளர்ந்த பிறகு உணவு என்றாலே ஒரு வெறுப்பு ஏற்படுவது போல.'

விம்மி படுக்கையை விட்டு எழுந்தாள். பல்லை விளக்கிவிட்டுச் சமையலறைக்குள் நுழைந்தாள். தாமோதரன் இன்னும் எழுந்திருக்கவில்லை என்று தெரிந்தது. அவன் முன்னால் எழுந்திருந்தால் தேநீர் போட்டு விடுவது வழக்கம். ஃப்ரிட்ஜில் பால் குறையாமல் நேற்றிரவு வைத்தளவே இருந்தது.

தாமோதரன் சாதாரணமாகச் சீக்கிரம் எழுந்துவிடுவான். நேற்றிரவு நிறையக் குடித்துவிட்டதன் காரணமாக எழுந்திருக்கவில்லையோ?

அடுப்பில் தேநீருக்குத் தண்ணீரும் பாலும் வைத்துவிட்டுத் தாமோதரன் படுத்திருந்த அறைக்குச் சென்றாள்.

அவள் திடுக்கிட்டுப் போனாள். அவன் படுத்திருந்த நிலை அவளுக்கு அதிர்ச்சியைத் தந்தது. (தொடரும்)

## க. சந்தானம் நினைவுநாள் : 28-2-81

''மனம் தளர வேண்டாம் இருள் சூழும் இந்த நேரத்தில் கடமையாற்ற முன்வாருங்கள்'' என்று பத்திரிகை ஆசிரியர்களுக்கு நெருக்கடிநிலைப் பிரகடனம் ஆனதும் அறை கூவல் விடுத்த க. சந்தானம், அதைத் தொடர்ந்து உண்ணாவிரதமும் மேற்கொண்டார், தமது 80 வது வயதில்!

''அரசியல் நிர்ணய சபையில் அங்கத்தினராக நான் இருந்து அரசியல் சாசனத்தை உருவாக்குவதில் பங்கேற்றிருந்தேன். அப்போது நெருக்கடி நிலைப்பிரகடனம் பற்றிய அத்தியாயம் துஷ்பிரயோகம் செய்யப்படலாம்; அதனால் இந்திய ஜனநாயகத்துக்கு ஆபத்து ஏற்படலாம் என்பதைச் சரியாக உணராமல் இருந்து விட்டேன்!''

இதற்குப் பரிகாரமாகத்தான் உண்ணா நோன்பிருந்து பிரார்த்தித்தார் க. சந்தானம்! பிரார்த்தனைக்குப் பலன் இருப்பதையும் கண்டு களித்தார்.

' சந்தானம் அடிக்கடி வலியுறுத்தியது : ஜனநாயக அரசு அமைவது மட்டும் போதாது. ஜனநாயக மனப்பான்மை அனைவரிடமும் வளரவேண்டும். துவேஷத்தையும் வெறுப்பையும் நீக்கிமாற்றுக் கருத்துக்களைச் சகித்துக் கொள்ளும் பக்குவம் பெற வேண்டும். நல்லெண்ணம் வளர வேண்டும்.''

-பேராசிரியர் கே. ஆர். ஸ்ரீனிவாச அய்யங்கார் எழுதிய ஒரு கட்டுரையிலிருந்து



நேருஜியுடன் க. சந்தானம்.

# தமிழ் சினிமாவினால் நன்மையா? தீமையா?



திருச்சி சீதாலக்ஷ்மி ராமசாமி பெண்கள் கல்லூரியின் அரங்கு நிரம்பி வழிந்தது.

கைதட்டலும் ஆரவாரமுமாக சுமார் ஒன்றரை மணி நேரம் அரங்கம் அமர்க்களப்பட்டது.

'தமிழ் சினிமாவினால் நன்மையா தீமையா? என்ற தலைப்பில் ஒரு பட்டி மன்றத்தை 'கல்கி' இக்கல்லூரி மாணவிகளுக்காக ஏற்பாடு செய்தது.

'தமிழ் சினிமாவினால் நன்மைகள்தான் அதிகம் என்று கே.ஆர்.சீதாலக்ஷ்மி தலைமையில் வி.சரோஜாவும், ராஜேஸ்வரியும் வாதிட்டனர்

தமிழ் சினிமாவினால் தீமைகள்தான் அதிகம் என்று எஸ். ஆர். ஜயந்தி தலைமையில் சுதாவும், தாங்கிணியும் வாதிட்டனர்.

சீதாலக்ஷ்மி ராமசுவாமி கல்லூரியின் முதல்வர் வி. காமாக்ஷி தலைமை வகிக்க, உருமு தனலக்ஷ்மி கல்லூரியில் உதவிப் பேராசிரியராகப் பணியாற்றும் திரு சேகர் நடுவராக இருந்து நிகழ்ச்சியை நடத்திக் கொடுத்தார்.

ஒவ்வொரு அணியினரும் தங்கள் கட்சியின் நியாயங்களை எடுத்துரைத்து முடிந்ததும், இரு அணித் தலைவர்களும் சுருக்கமாக அந்த வாதங்களைத் தொகுத்து நடுவர் முன் வைத்தனர். இறுதியில் இரு அணியினரின் கருத்துக்களையும் அலசித் தமது தீர்ப்பை நடுவர் வழங்கினார்.

தமிழ் சினிமாவினால் நன்மைகள்தான் அதிகம் என்ற தலைப்பில் மாணவியர் வெளியிட்ட கருத்துக்களில் சில :

சினிமா, மக்களின் மனத்தில் ஓர் ஆழமான பாதிப்பை ஏற்படுத்தும் சாதனமாக வளர்ந்துள்ளது. சோர்வுற்று இருக்கும் உள்ளங்களுக்குப் பொழுது போக்காகவும், பல நல்லியல்புகளை மனத்தில் பதிய வைக்கும் சாதனமாகவும், பல்லாயிரக்கணக்கான குடும்பங்களுக்கு ஜீவனோபாயமாகவும் தமிழ் சினிமா இன்று வேரூன்றி வளர்ந்துள்ளது.

கப்பலோட்டிய தமிழன், வீர பாண்டிய கட்ட பொம்மன் போன்ற திரைப் படங்கள் மக்களுக்கு எந்த அளவுக்குத் தொண்டு புரிந்தன என்று கணிப்பதே கடினம்!

எங்களைப் போன்ற இளைய தலைமுறையினர் பலருக்கும் சமகால நிகழ்ச்சிகள், சமகாலத் தலைவர்கள் போன்றவர்களைப் பற்றித்தான் நேரடியாகத் தெரியும். பாரதியாரைப் பற்றியோ, வ. உ. சி. குறித்தோ புத்தகங்களில் படிப்பதனால் மட்டுமே அறிய முடியும். ஆனாலும் இத்தகைய படிப்பால் அவர்களது பெருமையின் பரிமாணத்தை முற்றிலும் அறிய முடியுமா என்பது கேள்விக் குறி. இத்தகைய உன்னதத் தலைவர்களின் வாழ்க்கை வரலாற்று நிகழ்ச்சிகளைத் திரைப் படங்களில் காணும்போது மன நெகிழ்ச்சி உண்டாவதுடன் அவர்களது அருந் தொண்டுகள் என்றும் அழியாமல், உள்ளத்தில் பதிந்து விடுகின்றன.

பாரதியாரின் பாடல்களில் உள்ள கவிநயமும், தேசபக்தியும் பலரும் அறிந்ததுதான். ஆனாலும் தற்போதுள்ள இளைய சமுதாயத்தினரில் எத்தனை பேர் பாரதியின் கவிதைகளைத் தாமாக எடுத்து வைத்துக் கொண்டு படிக்கின்றனர்?

இந்நிலையில் பாரதியாரின் பாடல்களுக்கு இன்னிசை அமைத்துப் பொருத்தமான

✱ நடுவர் சேகரின் தீர்ப்பு

✱ அரங்கை நிறைத்த மாணவியர் கூட்டத்தில் ஒரு பகுதி







✖ குமாரி எஸ். ஆர். ஜெயந்தியின் வீராவேசப் பேச்சு

✖ வெற்றி பெற்ற அணியின் தலைவி குமாரி கே. ஆர். சீதாலக்ஷ்மிக்குக் கல்லூரி முதல்வர் பரிசு வழங்குகிறார்.

இடங்களில் வெள்ளித் திரையில் ஒலிக்கச் செய்தால் பல்லாயிரக் கணக்கான இளம் உள்ளங்களில் அப்புரட்சிக் கவியினிடம் ஈடுபாடு ஏற்படச் செய்ய முடியுமல்லவா?

சமீபத்தில் 'பசி' என்ற படம் வந்தது. எத்தனையோ ஏழைகளை நாம் அன்றாடம் கண்டும் மனத்தில் எவ்விதமான பாதிப்பும் ஏற்படுவதில்லை. ஆனால் திரைப் படத்தைக் கண்டபோது நம் மனத்தில் தோன்றிய பரிவும், நெகிழ்ச்சியும், இத்தகைய நிலையில் உள்ளவர்களுக்கு நம்மாலான உதவியைச் செய்ய வேண்டும் என்கிற உணர்வையும், ஏற்படுத்தியது என்பதை மறுக்க முடியுமா?

இம்மாதிரி அடுக்கிக் கொண்டே போகலாம். தியாகம், அன்பு, கருணை, பக்தி போன்ற பலவித உணர்வுகளையும் தூண்டும் விதமாகத் தமிழ்ப் படங்கள் பலவும் வெளியாகத்தான் செய்கின்றன.

தமிழ் சினிமாக்களில் ஆபாசம் பெருகி விட்டதாக எதிர் அணியினர் குரல் எழுப்பலாம். இம்மாதிரித் தீமைகள் எல்லாத் துறைகளிலும் தான் இருக்கின்றன. அவற்றை ஒதுக்கிவிட வேண்டும். ஒட்டு மொத்தமாகப் பார்க்கும் போது தமிழ் சினிமாவினால் நன்மைகள்தான் அதிகம் என்று ஆணித்தரமாகக் கூறலாம்!

தமிழ் சினிமாவினால் தீமைகள்தான் அதிகம் என்று வாதிட்ட மாணவியரின் கருத்துக்களில் சில:

சினிமாவினால் மக்களின் உள்ளங்களில் ஏற்படும் பாதிப்பு அதிகம் என்பது நூற்றுக்கு நூறு உண்மையே. இவற்றில் தீமை பயக்கும் பாதிப்புக்களே தமிழ் சினிமாவினால் அதிகம் என்பதை விளக்குவதுதான் எங்கள் நோக்கம்!

திரைப் படம் மூலம் ஒரு நல்லியல்பை உள்ளத்தில் ஏற்படுத்துவதைவிட, ஒரு தீய உணர்வை ஏற்படுத்துவது ரொம்பச் சுலபம்.

அருவருப்பான வசனங்கள், கொச்சையான நகைச்சுவை, இளம் உள்ளங்களில் பாலுணர்வைத் தூண்டும் விரசமான காட்சிகள், முறையற்ற உறவு முறைகளை வெளிச்சம் போட்டுக் காட்டும் கதைகள், பல கீழ்த்தரமான பாடல்கள், இரட்டை அர்த்த வசனங்கள், பாடல்கள், படுக்கையறைக் காட்சிகளைப்பிரம்மாண்டமானபோஸ்டர்களில் நடுத் தெருவில் வெளிப்படுத்தும் ஆபாசப் போக்கு, குரூரத்தை உள்ளங்களில் விதைக்கும் கொலைக் காட்சிகள், என்று அடுக்கிக் கொண்டே போனால் தமிழ்த் திரைப் படங்களால் மக்களுக்கு ஏற்படும் தீமைகளுக்கு எல்லையே இல்லை!

எதிர் அணியினர் குறிப்பிட்டது போன்று பக்தி ரசமான படங்கள், தேச பக்தியூட்டும் படங்கள், 'பசி' போன்ற சமுதாய உணர்

✖ போட்டியில் பங்கேற்ற மாணவியருடன் நிர்வாகிகள். நடுவில் உட்கார்ந்திருப்பவர் கல்லூரி முதல்வர் வி. காமாக்ஷி. இடது கோடியில் நசீர் சேகர்.





''பையன் ஏன் 'ஓ'ன்னு அழுறான்?''
''ஏ,பி,சி,டி சொல்லச் சொன்னா 'ஓ' வுக்கு மேலே சொல்லத் தெரியலே. அதனாலேதான் 'ஓ'ன்னு அழுறான்.'' - வி. ந. ஸ்ரீதரன்

வைத் தூண்டும் படங்கள் எத்தனை வெளி வருகின்றன? நூற்றுக்கு ஒன்றுகூட இல்லை. பெரும்பாலானவை இளைக்க் இளை நாற் றத்தைப் பரப்பும் குப்பைகள்தாம்!

பாரதி பாடல்களின் பெருமையைத் தமிழ் சினிமாவில் யாரோ பாடுவதைக் கேட்டால் தான் அறிய முடிகிறது என்று கூறியதைவிட அபத்தமான வாதம் இருக்கவே முடியாது. சினிமா மூலம்தான் வ. உ. சி.யின் பெரு மையை நாம் அறிய முடியு மென்றால் நாம் வெட்கித் தலை குனிய வேண்டியவர்களா கிறோம்!

நேரத்தை வீணாக்கி, பணத்தை விரய மாக்கி, உள்ளத்தில் கீழ்த்தரமான உணர்வு களைக் கிளறிவிடும் தமிழ்த் திரைப் படங்கள் சமுதாயத்துக்குத் தீமையை மட்டும் அல்ல பெரும் வீழ்ச்சியையே உண்டாக்கும்.

இரு அணியினரின் வாதத்துக்கும் பிறகு திரு சேகர் நடுவர் என்ற முறையில் தமது உரையை வழங்கினார்:

''தமிழ்த் திரைப் படத் துறையை நம்பி பல்லாயிரக் கணக்கான குடும்பங்கள் வாழ் கின்றன. சோர்வுற்று வீடு திரும்பும் பலருக் குப் பொழுது போக்கு அம்சமாக விளங்கி வரு கிறது, சினிமா. இன்று தமிழ்த் திரையுலகில் விழிப்புணர்ச்சியும் வளர்ச்சியும் ஏற்பட்டு வருகிறது. தீமைகள் பல இருந்தாலும் தமிழ் சினிமாவினால் மக்கள் பெறுகிற, பெறக் கூடிய நன்மைகளே அதிகம். காலப் போக் கில் தீய அம்சங்களை அறவே நீக்கிவிடும் முயற் சியில் ஈடுபடுவோம்'' என்று குறிப்பிட்ட சேகர், 'தமிழ் சினிமாவினால் நன்மைகள் தான் அதிகம்!' என்று வாதிட்ட குமாரி கே.ஆர்.சீதாலக்ஷ்மி தலைமையிலான அணியே வென்றதாகக் கூறி, தம் உரையை முடித்தார். கரவொலி அரங்கத்தை அதிரச் செய்தது.

இப்படி மன்றத்தில் எல்லா மாணவியரும் சிறப்பாக உரையாற்றினர். எனினும் குமாரி எஸ். ஆர். ஜெயந்தியின் திறமை அசாதாரண மானதாய் இருந்தது.

கல்லூரி முதல்வர் வி. காமாக்ஷி 'கல்கி' யின் சார்பாக வெற்றி பெற்ற அணிக்கு ரூ. 60 பரிசு வழங்கினார். போட்டியில் பங் கேற்ற எல்லா மாணவியருக்கும் புத்தகங்கள் பரிசளிக்கப்பட்டன.

தொகுப்பு : நாயகன்

புகைப்படங்கள் : மன்னை மூர்த்தி

---

அருள்வாக்கு

## ''பிச்சை போடு''

நம் தேசத்தில்மட்டும் என்றில்லை. லோகம் முழுக்க துர்ப்பிக்ஷம் அதிகமாகி வருகிறது. மெஷின்கள் நிறையச் செய்து விடலாம். ஃபாக்டரிகள் நிறைய வைத்துவிடலாம். ஆனால் பயிர் பச்சைகள் வளர்வது நம் கையில் இல்லாமல் இருக்கிறது. தானிய ஸம்ருத்தி



(செழிப்பு) இருந்தாலொழிய, வயிறு நிரம் பினால் அன்றி, பாக்கி என்ன சுபிட்சம் செய்து கொண்டாலும் மொத்தத்தில் துர்பிட்சமா கத்தான் இருக்கிறது. இப்பொழுது லோகத் தில் இந்த நிலைமைதான் இருக்கிறது. பயிர் பச்சை விளைச்சலுக்கு நம்முடைய அகட விகட சாமர்த்தியங்களால் பிரயோஜன மில்லை. என்ஜினியர் அணை கட்டலாம், ஆனால் மழையைப் பெய்விக்க அவரால் முடியாது. ஜகன் மாதாவான அன்ன பூர்ணேச்வரியை எல்லோரும் மனசாரப் பிரார்த்தித்துக் கொண்டால்தான் விமோ சனம் உண்டு. அவளே நாம் செய்கிற மகா பாவங்களை க்ஷமித்துத் தானிய ஸம்ருத்தியை அநுக்கிரகிப்பாள். துர்பிட்சம் போக அவளே பிச்சை போடுவாள்.

நம்முடைய ஆச்சார்யாள் ஸ்ரீ சங்கர பகவத் பாதாள் காசியில் இருந்தபோது அன்னபூரணி மீது ஒரு ஸ்தோத்திரம் பாடி அருளினார்.

அதில் சுலோகத்துக்குச் சுலோகம் முடி விலே 'கருணையின் பற்றுக் கொம்பாக இருக் கிற அம்மாவே, அன்னபூரணேச்வரியே, பிச்சை போடு' என்று உருக்கமாக வேண்டிக் கொள்கிறார்.

-ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சந்திரசேக ரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்

# நிர்மல் ஓவியங்கள்

ஆந்திரப் பிரதேசத்தில் அடிலாபாத் என்ற இடத்தில் உள்ள கிராமம் நிர்மல்.
இந்த இடம் ஆரம்பம் முதல் ஓவிய வேலைகளுக்குப் புகழ் பெற்றதாகும். இவர்கள் அந்தக்
காலத்தில் தாவர வண்ணங்கள் தயாரித்து என்றுமே அழியாத
நிறம் மாறாத ஓவியங்கள் செய்து வந்தனராம். காலப் போக்கில் அந்த
வண்ணங்கள் தயாரிக்கும் முறை தெரியாமல் போயிற்று.
ஆனால் அந்தப் பாணி ஓவியங்கள் இன்றும் தீட்டப்படுகின்றன. இவையே நிர்மல் பெயிண்டிங்
என்றும் அழைக்கப்படுகின்றன.
ஹைதராபாத்தில் சிறிது காலம் வசித்த லலிதாவுக்கு இதனை அறிய வேண்டும்
என்ற எண்ணம் ஏற்பட்டது. இதனைச் செய்யும் ஓர் ஓவியரிடம் இதனைப் பயின்றார் லலிதா.
பிறகு அதில் தாமே சில மெருகுகளை ஏற்றி இருக்கிறார்.
முதலில் கனமான காட்போர்ட் எடுத்து நான்கு பக்கங்களிலும் சட்டம் அடித்து உறுதியாகச்
செய்துகொள்ள வேண்டும். பிறகு காருக்கு பெயிண்ட் ஸ்ப்ரே பண்ணுபவரிடம்
தந்து நன்றாக அதில் ஸ்ப்ரே பண்ணச் சொல்ல வேண்டும். பொதுவாக
எல்லாப் பின்னணிகளும் கறுப்பில் இருந்தால் எடுபடுவதால் கறுப்பு வண்ணமே
ஸ்ப்ரே பண்ணுவது நல்லது. இரண்டு நாட்கள் வைத்தால் அது நன்றாக உலர்ந்துவிடுகிறது.
பிறகு அதில் வரைய வேண்டிய ஓவியங்களைத் தீட்டுகிறார்கள்.
டியூக்கோ பெயிண்ட் எடுத்து அந்த ஓவியத்தின் வண்ணங்களைத் தீட்டுகிறார்கள்.
டியூக்கோ பெயிண்ட் சிறிது கெட்டியானது, சீக்கிரம் உலரக் கூடியது.
இதனால் சற்று வேகமாகவும் வேலை செய்வது முக்கியம். ஓவியத்துக்கு வண்ணங்களைத்
தீட்டிய பிறகு டியூக்கோ வார்னிஷ் ஒரு முறை
அதன்மேல் தீட்டினால் ஓவியம் பளபளவென்று இருக்கிறது. 9''X6'' ஓவியங்கள்
தயாரிக்க சுமார் 30 – 35 ரூபாய் ஆகிறது என்கிறார் திருமதி லலிதா.

- குயிலி ராஜேஸ்வரி



# கழுத்தில் விழுந்த மாலை

## 6

பெரியப்பா வீட்டில் நாள முழுவதும் சலிக்காது உழைத்துப் பழக்கப்பட்ட மாதங்கிக்கு வீட்டு வேலைகளைக் கவனிக்கச் சிரமமே இருக்கவில்லை. மேலும் வீடு தன்னுடையது என்ற உற்சாகம். தன்னை மதித்துச் சாவிக் கொத்தையே மாமியார் தந்து விட்டாளே என்ற மகிழ்ச்சி. ஒருசில நாட்களில் ஆண்டாண்டு பழகினவள் போல வீட்டைப் பொறுப்புடன் கவனித்து எல்லா வேலைகளையும் செவ்வனே செய்யத் தொடங்கி விட்டிருந்தாள்.

வம்புகள் சேகரிக்கும் நிமித்தம் கல்யாணம் விசாரிக்க வந்த சங்கத்து அங்கத்தினர்கள்



காமாட்சிக்கும் அவள் தோழிகளுக்கும் பெரிய தோல்வி. வந்தவர்களை உட்காரச் சொல்லிக் கஸ்தூரி உபசரித்து முடிப்பதற்குள் கெட்டிலில் காப்பியும் தட்டுக்களில் கல்யாணப் பலகாரங்களுமாக எடுத்து வந்து இன் முகத்துடன் வந்தவர்களுக்குக் கொடுத்து மாதங்கி மிகவும் கவனித்துக் கொண்டாள்.

'ஹர்ஷன் கட்டாயமாகக் கம்பெனி காரியமாகத்தான் வெளியூர் போயிருக்க வேண்டும். இல்லாவிட்டால் அந்தப் பெண் முகத்தில் இத்தனை சிரிப்பைக் காண முடியுமா?'

விமரிசனம் திசை திரும்பிப் போய்விட்டது.

மகனின் அசட்டைக்கு ஈடு செய்வதுபோல் கஸ்தூரி தன் மருமகளிடம் மிகவும் அன்பு பாராட்டினாள்.

'கல்யாணம் விசாரிக்க வருகிறவங்க இந்த மாசம் பூராவும் வந்து போய்க் கொண்டே இருப்பாங்க. அதனால் நீ வீட்டு வேலைகளை முடித்துக் கொண்டதும் நல்ல புடவையாகப் பார்த்து உடுத்திக் கொண்டு நகைகள் போட்டுக்கொண்டு கல்யாணப் பெண்ணாக லட்சணமாக இரு'... மருமகளிடம் ஏற்கனவே சொல்லி விட்டிருந்தாள்.

அந்த வீட்டில் அம்மாவும் பிள்ளையும் வேலைக்குப் போகிறவர்கள். காலையில் காப்பி பலகாரம். கையோடு டிபன். இரவுதான் சம்பிரதாயமான சாப்பாடு என்ற வழக்கம். ஓய்வு நாட்களில்தான் பகலில் விமரிசையான சமையல். மாமியார் வீட்டின் நடப்புக்களை வந்த சில நாட்களிலேயே புரிந்துகொண்டு விட்டாள் மாதங்கி.

வாரம் முழுவதும் கஸ்தூரி வேலைக்கு ஓடிக் கொண்டிருந்தாள். ஓய்வு நாளில் களைப்பாறக் கொஞ்சம் பகலில் தூங்கி எழுந்தால் சரியாக இருந்தது. அத்தனை பெரிய வீட்டைத் துப்புரவாகச் சுத்தப்படுத்தி வைத்துக்கொள்ளப் பொழுது இல்லாது சாமான்களெல்லாம் போட்டது போட்ட இடத்தில் கிடந்தன. தோட்டத்தைக் கவனிக்க நேரம் இருக்கவில்லை. அண்டை அயலார் பங்களாக்களின் தோட்டங்களில் பசிய புல் தரைகளும் பூச்செடிகளும் கண்களுக்கு ஒரு விருந்தாக இருந்தன. அவை நடுவே அவர்களது தோட்டம் திருஷ்டி பரிகாரமாகப் புதர்கள் மண்டிக் கிடந்தது.

இன்பமான எதிர்பார்ப்பில் ஏற்பட்ட பயங்கர ஏமாற்றத்தையும் துயரத்தையும் மறக்க மாதங்கி நாள் முழுதும் அயராது வீட்டு வேலைகளைக் கவனித்துக் கொண்டிருந்தாள். ஒருசில தினங்களில் அந்த வீடு புது முகம் பெற்றுப்பொலிவோடு காணப்பட்டது. தரை சுத்தமாகப் பளிச்சென்று இருந்தது.

சாமான்கள் இருக்க வேண்டிய இடத்தில் ஒழுங்காக அடுக்கப்பட்டு விட்டிருந்தன. புத்தக அலமாரி துப்புரவாகத் துடைக்கப்பட்டு, வரிசையாகப் புத்தகங்கள் நின்றன. மேஜை மேல் கிடந்த பத்திரிகைக் குவியல்களும் குளியலறை மூலையில் குவிந்து கிடந்த அழுக்குத் துணிகளும் மாயமாயின. வேலைக்காரியின் கணவனை உதவிக்கு அழைத்து, தோட்டத்தைச் சீராக்கி, புதிய பூச்செடிகளை நட்டு வைத்திருந்தாள் மாதங்கி.

மாமியார் எழுந்து குளித்து முடித்துவிட்டு, காலைப் பலகாரம் சாப்பிடு முன் அவளது அலுவலகக் கடிதங்களைக் கொண்ட பிரீஃப் கேஸ், பகல் உணவு டிபன் டப்பா இத்யாதிகளுடன் காரேஜ் அருகே தயாராக நின்று கொள்வாள் அவள்.

''அத்தை டிபனை மறக்காதீங்க...பத்திரம் சாலையைப் பார்த்து நிதானமா காரை ஓட்டுங்க... நான் எல்லாம் கவனிச்சுக்கிறேன்... போயிட்டு வாங்க...'' பரிவோடு நித்தம் வேலைக்கு அனுப்பி வைத்தாள்.

பத்து மாதம் சுமந்து பெற்ற பெண்ணாக இருந்தால் கூட இத்தனை கருத்துடன் கவனிக்க மாட்டாளே! இந்தக் காலத்தில் இப்படியும் ஒரு அதிசயமான பெண் உண்டா?

உயிர் போனாலும் சரி எந்த விதமான கஷ்டமும் இவளை அணுக அனுமதிக்க மாட்டேன். – மாமியார் மனத்தில் மருமகள் மீது ஒரு அழுத்தமான பிடிப்பு ஏற்பட்டு விட்டிருந்தது.

அன்று மாலை அவர்களது உபயோகத்துக்குக் கொடுக்கப்பட்டிருந்த பெரிய படுக்கை அறையைச் சுத்தம் செய்து கொண்டிருந்த போதுதான் கவனித்தாள் – மூடியிருந்த அலமாரியின் மேல் தட்டில் ஒரு பக்கம் இரண்டு அழுக்குச் சட்டைகள் துவைக்கப்படாது சுருட்டி வைக்கப் பட்டிருந்தன.

அவைகள் ஹர்ஷனுடையவை. கையில் அவைகளை எடுத்ததுமே கணவனைத் திரும்பக் கண்டுவிட்டது போன்றதொரு பரிவில் மனம் குழைந்து போனாள். வேலைக்காரியிடம் கூடக் கொடுத்துத் தோய்க்க மனமின்றி தானே துவைத்துக் கொடியில் உலரப் போட்டாள். மடிப்புகளை இழுத்து உதறிவிட்டபடி அவைகளை மெல்ல விரலால் தடவிப் பார்த்தாள் மெத்தென்று கைக்கு இதமாக இருந்தது. மென்மையான உடைகளை உடுக்கத் தெரிந்த ஹர்ஷனுக்கு ஏன் கடுமையானதொரு சுபாவம்? நினைக்கவும் அவளுக்குத் துக்கமாகத்தான் இருந்தது.

அன்று மாலை வீட்டுக்குத் திரும்பியதும் மருமகளைத் தன்னுடன் கோவிலுக்கு அழைத்துப் போக விரும்புவதாகக் கஸ்தூரி சொல்லி விட்டுப் போயிருந்தாள். வீணான சிந்தனைகளில் நேரத்தை ஓட்டிக் கொண்டு தயங்கி நிற்க அவளுக்குப் பொழுது இருக்கவில்லை.

இரவு சமையலை வேகமாக முடித்து வைத்தாள். அலுப்புடன் அலுவலகத்திலிருந்து மாமியார் வந்ததும் சாப்பிடக் கொடுக்க, காப்பிக்கு எல்லாம் தயாராக வைத்திருந்தாள்.

பொழுது சாயும் நேரம். வாயிலில் கார் வந்து நிற்கும் சப்தம் கேட்டது.

பின்புறத் தோட்டத்தில் சங்கிலியால் தூணோடு பிணைக்கப்பட்டிருந்த ரோவர் உற்சாகமாகக் குரைக்கத் தொடங்கியது.

பரபரப்புடன் அவள் வாயிலுக்கு விரைந்தாள். அதற்குள் தன்னிடமிருந்த மாற்றுச் சாவியால் வாயிற் கதவைத் திறந்து கொண்டு உள்ளே வந்த ஹர்ஷனைக் கண்டு அவள் ஒரு கணம் அதிர்ந்து போய் விட்டாள்.

✱ லக்ஷ்மி



அவனும் ஆச்சரியத்துடன் அவளை ஏற இறங்க உற்றுப் பார்த்தான். பச்சைப் பட்டுச் சேலையில் பச்சைக் கல் நகைகளில் கண்களுக்குக் குளுமையாக — கல்யாணத்தின் போது பார்த்ததைவிட புது மெருகுடன் எதிரே தயக்கமாக நின்றவளை மீண்டும் ஒரு முறை வியப்போடு பார்த்தான்.

இல்லே... இல்லே... இந்த அம்மாவின் இஷ்டத்துக்கு வளைங்கிப் போவதா?... அவனது உள்ளம் புரட்சி செய்யவே தொண்டையைச் செருமிக் கொண்டு முகத்தில் கடுமை பொங்கச் சுற்று முற்றும் கவனித்தான்.

''அத்தை வரும் நேரம்தான். கோவிலுக்குப் போகலாம்னு சொன்னுங்க. நீங்க வந்தது நல்லதாப் போச்சு....'' சொல்லிக் கொண்டே அவன் பதிலுக்குக் காத்திராமல் உள்ளே திரும்பி விரைந்தாள்.

மேஜை மீது கொண்டு வந்து வைத்த காப்பி டம்ளரை வெறித்துப் பார்த்தான்.

அவளிடம் அவனை மெல்ல இணைத்து வைக்க அம்மா செய்திருக்கும் போதனை—பயிற்சி! அவனுக்குக் கோபம் பொங்கிக் கொண்டு வந்தது.

''தேவையில்லே — உள்ளே எடுத்துக் கொண்டு போ.'' அதட்டிவிட்டுக் கையில் சுமந்து கொண்டிருந்த பெட்டியைத் தரையில் ஒரு பக்கமாக வைத்தான். மடமடவென்று உள்ளே சென்றுன். பிரிட்ஜைத் திறந்து அம்மா தயாரித்து வைத்திருந்த கிரேப் ஜூஸ் கொண்ட பாட்டிலைக் கையில் எடுத்து ஒரு கண்ணுடி டம்ளரில் ஊற்றி நீரை அளவோடு கலந்து கொண்டான்.

எரித்து விடுகிறவன் போல மாதங்கியை உறுத்துப் பார்த்தபடி மேஜை மேல் தான் வைத்த பழரச டம்ளரை எடுக்கக் கையை நீட்டியவன் தவறித் தட்டி விடவே டமால் என்ற சப்தத்துடன் டம்ளர் கீழே விழுந்து நொறுங்கியது. திராட்சை ரசம் அவனது சட்டை பாண்டு முகம், கை எங்கும் தெறித்துக் கறையாக்கியது.

குப்பென்று முகம் சிவக்கத் தரையில் சிதறிக்கிடந்த கண்ணுடித் துண்டங்களைத் திகைப்பும் எரிச்சலுமாகப் பார்த்தான்.

''பரவாயில்லே. அதை நான் கவனிச்சுக்கிறேன். நீங்க முகம் கைகளைக் கழுவிக் கொண்டு உடை மாத்திக்கோங்க'' சொல்லி விட்டு மின்னலாக மறைந்தாள்.

மாற்று வேட்டி சட்டை — துடைத்துக் கொள்ள துவாலை எல்லாவற்றையும் எடுத்து வந்து குளியலறைக் கம்பிமீது தொங்க விட்டாள்.

மொஸைக் தரையில் கறையிட்டுக்கொண்டு ஓடிய பழ ரசத்தை மெல்ல ஒரு பழந் துணியால் ஒத்தி எடுத்து, கண்ணுடி துண்டங்களைக் கவனமாகப் பொறுக்கி அப்புறப்படுத்தி அவன் உடை மாற்றிக் கொண்டு வெளியே வருவதற்குள் அந்த இடத்தைச் சுத்தப் படுத்தி விட்டிருந்தாள்.

''சூடா வேறே கொஞ்சம் காப்பி கொண்டு வரட்டுமா?'' — அவள் கேட்டபோது அவனுக்கு எரிச்சல் பற்றிக் கொண்டு வந்தது.

ஒரு டம்ளர் பழ ரசத்தை எடுத்துத் தானே குடிக்கக் கூடத் தெரியாத மடையன்போல் அவள் முன் டம்ளரை உடைத்து அசடு வழிந்ததை எண்ணி அவனுள் ஆத்திரம்.

''நான் வருவதற்குள் மூட்டையைக் கட்டிக் கொண்டு இங்கிருந்து கிளம்பிடணும்னு சொல்லியிருந்தேனே இன்னமும் இங்கே காம்ப் போட்டுக் கொண்டு...இந்த வீண் உபசாரமெல்லாம் யாருக்கு வேணும்?''

அழைப்பு மணி ஒலிக்கவே அவனுக்குப் பதில் அளிக்காது மாதங்கி வாசலுக்கு ஓடிக் கதவைத் திறந்தாள்.

''எட்டு வீடு கேட்கிறுப் போல ஏன் கத்தறே? இந்த உபசாரம் எனக்கு வேணும். அவள் இங்கிருந்து எதுக்குப் போகணும்?'' கோபத்துடன் கேட்டுக் கொண்டே உள்ளே வந்த கஸ்தூரி மகனை முறைத்தாள்.

''அப்போ நான் இங்கேயிருந்து போகணும்னு சொல்றீங்களா?... இந்த வீடு என் தந்தை வழி வந்த சொத்து தெரியுமில்லேயா?'' மகன் கேட்டான்.

''தெரியும். இந்த வீடு என் கணவருடையது. அதனால் இங்கே தங்கியிருக்க எனக்கு உரிமை உண்டு. அதே போல இந்த வீடு மாதங்கியினுடைய புருஷனுடையதும் கூட. அதனாலே தொடர்ந்து அவள் இங்கே தங்கியிருக்க உரிமை உண்டு.''

''அவளுக்கு நீங்க சரியான வக்கீல்.''

கண்களில் துளித்த கண்ணீரை விழுங்கிக் கொண்டாள் மாதங்கி. மாமியாரை நன்றி உணர்வோடு நிமிர்ந்து பார்த்தாள்.

''அத்தை உங்களுக்குக் காப்பி தயாரா இருக்கு. கொண்டு வரவா?'' என்றாள்.

''தாகம் உசிரு போறது.கொண்டுவாம்மா சீக்கிரம். நானும் விரைவா கோயிலுக்குக் கிளம்பத் தயாராயிடறேன். இருட்டறதுக்குள்ளே போய்விடலாம்.... ஹர்ஷன்! நீயும் கோயிலுக்கு எங்க கூட வாயேன்!'' மகன் பக்கம் திரும்பி மெல்லக் கேட்டாள் தாயார்.

''மாமியாரும் மருமகளும் மிகவும் ஒற்றுமையா வாழுறுங்கன்னு உங்க சிநேகிதிகள் தெரிஞ்சுக்கட்டும். நீங்க ரெண்டு பேரும் போயிட்டு வாங்க.நான்இடையிலே எதுக்கு?'' சீறிய ஹர்ஷன் மாடிப் பக்கம் நகர்ந்தான்.

கவலையும் துயரமுமாக ஒடுங்கி நின்ற மருமகளைக் கனிவுடன் பார்த்தாள் கஸ்தூரி.

''கோயிலுக்கு எடுத்துப் போக வேண்டியதை யெல்லாம் தயாராக எடுத்துக்கோ... அந்த நிமிஷத்திலே வந்துடறேன்... இந்தப் பச்சை நெக்லஸ் உனக்கு ரொம்ப அழகா இருக்கு.'' லேசாக மருமகள் கன்னத்தைத் தட்டிவிட்டுப் பின்பக்கம் சென்றாள்.

அதே சமயம் ஓங்கி மகன் கன்னத்தில் ஒரு அறை வைக்கமுடியாது வயது குறுக்கிட்டு விட்டதே என்று இயலாமையை எண்ணி அவளது தாயுள்ளம் குமுறியது. (தொடரும்)



தொடர்ந்து வரும் விக்கலை ஒரே நொடியில் நிறுத்த வேண்டுமானுல் இரண்டு ஸ்பூன் சர்க்கரையை வாயில் போட்டுக் கொள்ளுங்கள். விக்கல் உடனே நின்று விடும்.ஏன் இந்தக் காலத்தில் சர்க்கரை விலையை கேட்டாலே நின்று விடும் என்கிறீர்களா? அதுவும் சரிதான்.

-வி.பிரபாகர்

கமலா நான்காவது பிரசவத்துக்காக நாசரேத் மருத்துவ மனையில் சேர்ந்து ஐந்தாறு தினங்களாகின்றன. இன்னும் குழந்தை பிறக்கவில்லை. ஒரு வாரத்தில் பேறுகாலம் ஏற்பட்டுவிடும் என்று லேடி டாக்டர் சொன்னதை வைத்து ஒரு வாரம் எடுத்திருந்த விடுப்பின் ஆயுள் குறைந்து கொண்டு வந்தது. இன்னும் பிரசவம் ஆகவில்லை.

குழந்தைகள் – ஆறு வயது ராஜலக்ஷ்மி, நான்கு வயது அமுதா, மூன்றாவது குழந்தையான இரண்டு வயது சுகந்தி ஆகிய மூவரையும் அம்மா வீட்டிலேயே பார்த்துக்கொள்வார்கள். ஆனால், ஒரு வாரத்தில் பிரசவம் ஆகிவிடும் என்று லேடி டாக்டர் சொல்லியிருந்ததால் அவர்களையும் இங்கே அழைத்துக்கொண்டு வந்தாயிற்று.

பிரசவ நாள்நெருங்க, நெருங்கக்கமலத்தின் கலக்கமும், தயக்கமும் தெரியாமல் இல்லை.

''உனக்கு நார்மல் பிரசவம்தான் ஏற்படும். அப்படியிருக்க நீ ஏன் இப்படிப் பயந்து கலங்குகிறாய்?'' என்று லேடி டாக்டர் ரமாபாய் கேட்டதற்கு, ''அதற்கில்லே....'' என்று சமாளித்தாள் கமலம்.

கமலத்தின் கவலே அவர்களில் யாருக்குத் தெரியப் போகிறது? அம்மாவுக்கே தெரியாதே?

மூன்றாவது மாதம் முழுகாமல் இருக்கிறேன் என்று தயங்கித் தயங்கிக் கமலம் என்னிடம் சொன்னபோது ஆத்திரம் ஆத்திரமாக வந்தது.

''போதுமே... பெரிய செய்தியாக வந்து சொல்லிவிட்டாயாக்கும்..என்னுடைய நண்பர்கள் உன்னே எனக்கு நிச்சயம் செய்யும் முன்பே எச்சரித்தார்கள். 'சங்கரா, பணம், சொத்து, அது இதுன்னு நீ ஆசைப்பட்டுக் கட்டிக் கொள்ளப் போகும் பெண், அவர்கள் பெற்றோருக்கு அஞ்சாவது. அவர்களுக்கு ஆண் வாரிசே கிடையாது. அதனால், உனக்கும் பெண் குழந்தையாகவே பிறக்கும். பேசாமல் வேறு எங்காவது பார்!' என்று.''

''அதற்கு என்ன சொன்னீங்க?''

'' 'போடா போ! அதெல்லாம் கடவுளாகப் பார்த்து அமைப்பது. நம் கையில் எங்கேடா இருக்கு?'ன்னு அவர்கள் வாயை அடைத்தேன். இப்போது? மூன்றும் சொல்லி வைத்தாற்போல் பெண்கள்... நாலாவதும்...''

''கவலேப்படாதீங்க... இது நிச்சயம் ஆண் குழந்தையாகத்தான் இருக்கும்!''

''நானும் தீர்மானித்து விட்டேன்... அடுத்ததும் பெண்ணுனல் உன்னேடு உறவு வைத்துக் கொள்வதில்லே! முடிந்தவரை உன்னே விட்டு விலகியே இருப்பேன்! இது எதுவரை தெரியுமா? உனக்கும் எனக்கும் அறுபதுக்கறுபது நடக்கும்வரை... இதுதான் நான் உனக்குத் தரும் தண்டனே!''

அன்று முதல் கமலம் என்னேடு பேசவில்லே.

கமலம் தினசரி கோயிலுக்குப் போய் வந்தாள். நான்காவது பிறப்பது ஆண் குழந்தையாக இருக்கட்டும் என்று கமலம் வேண்டாத தெய்வம் இல்லே.

ஆபீஸ் வேலேயாய்மதுரைக்குப் போயிருந்தபோது நண்பர் ஆத்மநாதன் கூட்டாம்புளி ஜோஸ்யரைப் பற்றிப் பிரமாதமாகச் சொன்னுர்.

''மிஸ்டர் சங்கர்! கூட்டாம்புளியார் சொன்னுல் கரெக்டா இருக்கும். ஜோசியத்தில் புலி'' என்று ஆத்மநாதன் அவரிடம் அழைத்துச் சென்றுர்.

''குழந்தாய்! உனக்கு நான்காவது பிறக்கப் போவது ஆண் குழந்தை! இதில் நீ எந்தவித ஐயப்பாடும் கொள்ள வேண்டாம். கூட்டாம்புளியார் சொல்லிவிட்டால் தப்பு இருக்காது!''

''நன்றி ஜோசியர்வாள்! ஐந்தாவது எப்படி என்று சொல்ல முடியுமா?''

# மணம் மாறிய மலர்

கருணாமணாளன்

''குழந்தாய், ஐந்தாவது பிறப்பது பெண் குழந்தை... ஆனால்...''

''என்ன ஆனால்?''

''அது தாயைச் சாப்பிட்டுவிடும்!''

ஐந்து ரூபாய்த் தாளை மடித்து உண்டியலில் போட்டுவிட்டுத் திரும்பினோம்.

ஆஸ்பத்திரியில் நான்காவதும் பெண் குழந்தை என்று நர்ஸ் அறிவித்ததும் கமலத்தின் படுக்கைப் பக்கமே செல்லாமல் ஒதுங்கி இருந்தே என் ஆத்திரத்தைத் தணித்தேன்.

திருச்சிக்குத் திரும்பி முழு நேரமும் ஆபீஸ் வேலையிலேயே செலவழிப்பதில் ஒரு வகைத் திருப்தி நிறைந்திருந்தது.

கமலம் அவ்வப்போது நான்காவது பிறந்த குழந்தையின் பூஞ்சிரிப்பையும், வளர்ச்சியையும் குறுகுறுத்த அதன் குட்டி கையையும் வர்ணித்து வர்ணித்துக் கடிதங்களில் எழுதுவாள். படித்துப் பார்த்துவிட்டுக் கசக்கி எறிவேன். பதில் போடுவதில்லை.

வழக்கமாக வரும் கடிதத்துடன் அன்று குழந்தையின் போட்டோவையும் வைத்துக் கமலம் அனுப்பியிருந்தாள். அப்பொழுதாவது மனம் மாறாதா என்ற நப்பாசையில்!

''மிஸ்டர் சங்கர்! நீங்கள் பெங்களூர்க்கிளை இன்ஸ்பெக்ஷனுக்குப் போய் வர வேண்டும் என்று நேற்று நடந்த போர்டு மீட்டிங்கில் தீர்மானம் ஆகியிருக்கிறது. நாளை புறப்படுவதற்குத் தயாராக இருங்கள்!'' ஜி.எம். பிரதாப் கூறினார்.

இரண்டு வருஷங்களுக்குப் பிறகு மறுபடியும் பெங்களூர் செல்வதற்குக் கம்பெனி சார்பில் வாய்ப்புக் கிடைத்திருக்கிறது! உள்ளத்துக் கவலைகளைப் பதினைந்துதினங்கள் வரை பெங்களூரில் மறந்து மகிழ்ச்சிகரமாக இருக்கலாம்.

போன தடவை தங்கியிருந்த லாட்ஜிலேயே இப்போதும் தங்கியிருந்தேன். போன தடவை 'கம்பெனி' தந்த மாலதியை இந்தத் தடவையும் அழைத்து வரச் செய்தேன்.

என்னைக் கண்டதும் மாலதி துயரத்தோடு சொன்னாள்: ''மூன்று தலைமுறையாக எங்கள் குடும்பத்தில் பெண் குழந்தை ஒவ்வொன்று தான் தங்கும். அதை நாங்கள் நன்றாய் வளர்த்துப் பரிபக்குவப்படுத்தி இந்தத் துறையில் திருப்பிப் பணம் சம்பாதிப்போம்! அதற்காகப் பெண் குழந்தைகள் உள்ள ஆண்களிடம் மட்டுமே அசல் உறவு வைப்போம். உங்களிடம் விசாரித்தபோது உங்களுக்கு மூன்று பெண் குழந்தைகள் இருப்பதாகச் சொல்லவும், நான் மகிழ்ந்துபோய் உங்களுடன் அளவுக்கு அதிகமாகவே உறவு வைத்தேன். உங்கள் முத்திரை என் கருவில் வளர்ந்தது. ஆனால்... பிறந்தது ஆண் குழந்தை!'' மாலதி நிறுத்தினாள்.

''ஆண் குழந்தையா?''

''ஆம்! என்னைப் பொறுத்தவரை அது ஒரு வேண்டாத குழந்தை. நர்ஸிங் ஹோமில் வைத்தே கொடுத்து விட்டேன். எங்காவது ஒரு அநாதை ஆசிரமத்தில் சேர்க்கும்படி.''

ஒரு பெண் குழந்தை வேண்டும் என்று மாலதி விரும்பியது போல் நம் காழ்ப்பைத் தவிர்ப்பதற்கு, வெறுப்பைப் போக்குவதற்கு அதிருப்தியை நீக்குவதற்கு கமலமும் ஓர் ஆண் குழந்தை வேண்டு மென்று தவறியிருந்தால்...? சே! நினைக்கவே பயமாக இருந்தது. எவ்வளவு பெரிய தவறு செய்துவிட்டோம்...

பெங்களூர் வந்து விட்டுப் போன தடவை ஊர் சென்ற பிறகுதான் கமலம் நான்காவது குழந்தை உண்டாகியிருப்பதைச்சொன்னாள். ஆனால், அது கணக்குப்படி ஐந்தாவது! அப்படியானால்....அப்படியானால்... கூட்டாம் புளி ஜோஸ்யர் சொன்ன பிரகாரம் சரியாகி விட்டதே!

கமலத்துக்குத் துரோகம் இழைத்துவிட்டு அந்தப் புனிதவதியைக் குற்றம் சுமத்தி—நாமும் ஒரு மனிதன் என்று நடமாடுகிறோமே!

ஆபீஸில் நுழைந்தபோது, ''ஸார், உங்களுக்கு கடிதம் திருச்சியிலிருந்து ரீ- டைரக்ட் பண்ணி வந்திருக்கு...'' என்றார் ஆபீஸ் சகா.

தபாலைப் பிரித்தேன். கமலம் எழுதியிருந்தாள்.

அன்புள்ள அத்தான்!

தங்கள் இதயம் இவ்வளவு தூரம் இறுகிவிடும் என்று நான் எதிர்பார்க்கவே இல்லை. ஒரு ஆண் குழந்தை இல்லாத குறை உங்களை இப்படி அலைக்கழித்து வைத்துவிடும் என்று என்னால் நினைத்துக்கூடப்பார்க்கமுடியவில்லை. இருபது கடிதங்களுக்கு மேல் எழுதினேன். பதிலே வரையவில்லை.

உங்கள் உள்ளம் திசை திரும்ப வேண்டுமென்றால் உங்களுக்கு ஓர் ஆண் குழந்தை வேண்டும். உங்கள் ஆசை என் மூலம் நிறைவேறப் பிராப்தம் இல்லை. அதனால், நான் உயிரோடு இருந்தும் பிரயோஜனமில்லை. நான் மடிந்து விட்டால்...? நீங்கள் எப்படியும் மறு மணம் செய்வீர்கள். அத்தான்... அப்போதாவது உங்களுக்கு நிச்சயமாக ஓர் ஆண் குழந்தை பிறக்கும்! அப்படி அமைய வேண்டும் என்று பிரார்த்தித்தவளாக என் வாழ்வை முடித்துக் கொள்கிறேன்.-கமலம்.''

''கமலம்!'' — அதிர்ந்தேன்.

''என்ன ஸார்?'' — எல்லோரும் ஓடி வந்தார்கள்.

கடிதம் அவர்கள் பார்வையில் பட்டுவிடக் கூடாது என்று கடிதத்தைக் கிழித்தேன்.

'ஐந்தாவது ,பெண் குழந்தை... தாயைச் சாப்பிட்டுவிடும்!' கூட்டாம்புளியாரின் சொற்கள் பயங்கரமாகச் செவிகளில் ஒலிப்பது போலிருந்தது.



கோர்ட் பியூன்:- ஏலக்கடை ஆறுமுகம், ஏலக்கடை ஆறுமுகம் ஏலக்கடை ஆறுமுகம்.

ஆறுமுகம்:- ஆஜர் ஒருதரம், ஆஜர் இரண்டுதரம், ஆஜர் மூன்று தரம்.

-ச. சிவசைலம்

# புள்ளிகள் செய்திகள்




✖ டெலிபோன் டெஸ்டர்.

● பம்பாயில் இருக்கும் திருமதி அன்னலக்ஷ்மி ராஜேந்திரனுக்கு எலெக்ட்ரானிக் துறையில் நிறைய ஈடுபாடு உண்டு. கணவர் ராஜேந்திரன் பம்பாய் டெலிபோனில் டெபுடி ஜெனரல் மானேஜர். பாதிமா கல்லூரி, மதுரையில் படித்துப் பட்டம் பெற்ற அன்னலட்கமி வீட்டிலேயே ஒரு டி.வி. செட் தயாரித்து விட்டார்!

அவர் வீட்டு டெலிபோன் (எல்லா வீட்டு டெலிபோனையும்போல்) அடிக்கடி மக்கார் பண்ணிக் கொண்டிருந்தது. டெலிபோன் டெஸ்டர் ஒன்றைத் தயார் செய்தார். இந்த மாதிரிக் கருவிகள் டெலிபோன் இலாகாவில் இருந்தாலும் வீடு வீடாக எடுத்துச் சென்று டெஸ்ட் பண்ண முடியாத அளவு கனமானவை. டெலிபோனைத்தான் எடுத்துக் கொண்டு போய் டெஸ்ட் செய்ய வேண்டும்.

ஒரு டெலிபோன் டெஸ்டருக்கு வேண்டிய எல்லா அம்சங்களையும் அடக்கமாகக் குறைந்த எடையில் தயார் செய்ய முனைந்தார்.

கடைசியில் சுமார் ஒன்றரை கிலோ எடையுள்ள கருவியைக் கண்டு பிடித்தார். தேசிய ஆராய்ச்சி நிறுவனம் இந்தக் கண்டு பிடிப்புக்கு ஐயாயிரம்ரூபாய் பரிசும் அளித்தது.

இந்த டெஸ்டரின் சிறப்புகளை திருமதி ராஜேந்திரன் விளக்குவதைப் புரிந்து கொள்ள நமக்கு ஓரளவு எலெக்ட்ரானிக் துறையில் பரிச்சயம் இருக்க வேண்டும். பம்பாயில் உள்ள கம்பெனி ஒன்று இப்போது இந்த அன்னலக்ஷ்மி டெஸ்டரைத் தயாரித்து விற்பனை செய்து வருகிறது. —கமல்



✖ அன்னலக்ஷ்மி

● பத்ம பூஷண் விருது பெற்ற வங்க இயக்குநர் மிரிணாள் சென். கடந்த 25 வருடங்களில் இவர் தயாரித்து இயக்கிய 17 படங்களை ''மிரிணாள் சென் பெர்ஸ்பக்டிவ்'' என்னும் நிகழ்ச்சியாக டெல்லி பிலிம் பெஸ்டிவலில் திரையிட்டார்கள். வங்காளம், ஹிந்தி, தெலுங்கு மொழிகளில் படங்களை இயக்கியுள்ள மிரிணாள் சென்னின் படங்கள் வேலையில்லாத் திண்டாட்டம், தொழிலாளர் பிரச்னைகள், சேரி வாழ்பவர்கள் வாழ்வு நிலை, வர்க்க பேதத்தின் அடிப்படையில் எழும் கிளர்ச்சிகள் போன்றவற்றைத் திறம்படப் படம் பிடித்துக் காட்டுபவை. அவரது ''மிருகய்யா'' ''கோரஸ்'', ''புவன் ஷோம்'', ''பரசுராம்'' போன்ற படங்கள் பல தேசிய சர்வதேசப் பரிசுகள் பெற்றவை. சத்யஜித்ரேக்கு அடுத்தபடியாக உலக சினிமா அரங்கில் மதிப்புப் பெற்றுள்ள இந்தியர் மிரிணாள் சென். வேலைக்குச் செல்லும் ஒரு மத்தியதரக் குடும்பப் பெண்ணையும், அவளது குடும்பத்தவர்களையும் வைத்து அண்மையில் சென் இயக்கிய ''ஏக் தின் பிரதி தின்'' வங்காளத்தில் பல வாரங்கள் ஓடி நல்ல வசூல் பெற்றது. — கண்ணன்

✖ மிரிணாள்சென்

# கடுகு பதில்கள்!



⌘ ஜி. தீபன், வேலூர் 632007

கே: உங்களைக் கவர்ந்த பிறமொழி நாடகம் ஒன்றைச் சொல்லுங்களேன்.

ப: டோனி ஹான்காக் என்ற பிரிட்டிஷ் நடிகர் பல நகைச்சுவை நாடகங்களை பி.பி.ஸி. ரேடியோவிலும் டி.வி.யிலும் நடித்திருக்கிறார். அந்த நாடகங்கள் சிலவற்றைப் படித்து இருக்கிறேன். எல்லாமே ஜோராக இருக்கும். நாடகாசிரியர் ஸிம்ப்ஸன், கேல்டன் ஆகியவர்களின் விசிறி நான்.

⌘ விஜயராம், அதிராமபட்டினம்

கே: பதில் தெரியாத கேள்விகளை ஒதுக்கி விடுவீர்களா?

ப: சேச்சே, அப்படி யெல்லாம் செய்ய மாட்டேன். அந்த மாதிரி கேள்விகளுக்கும் பதில் எழுதிவிடுவேன்!

⌘ பி. என். ராமன், சாந்தாகுருஸ் (பம்பாய்)

கே: பாலசந்தர் பாரதியார் வரலாற்றைப் படம் எடுக்கப் போகிறாராமே?

ப: அவருடைய பாடல்கள் உள்ளத்தின் நரம்புகளை மீட்டி உணர்ச்சிகளைத் தூண்டி விடும் அற்புதங்கள். இந்த நூற்றாண்டின் இணையிலாக் கவிஞர் அவர். இவை யாவும் மறுக்க முடியாத உண்மைகள். ஆனால் பாரதியார் என்ற மனிதரின் வாழ்க்கையைப் படித்தவர்கள், அவர் பல சமயம் சராசரி மனிதராகவும், வேறு சில சமயங்களில் அதற்குக் கீழாகவும் இருந்திருக்கிறார் என்பதை ஒத்துக் கொள்வார்கள். ஆகவே பாலசந்தர் இந்தப் படத்தை எடுக்கு முன் கம்பி மேல் நடந்து பழக வேண்டும்.

⌘ அருணாசலம், தேவகோட்டை

கே: செட்டி நாட்டில் மாடிப்படியை 'சீடிப் படி' என்று சொல்கிறார்களே, காரணம் என்ன?

ப: இந்தி மொழியில் 'ஸீடி' என்றால் படிகள் என்று அர்த்தம். இதுதான் சீடிப் படியாக ஆகி இருக்க வேண்டும், போஸ்ட் கம்பம் ஆன மாதிரி!

⌘ என். சங்கரன், மதுரை

கே: எத்தனை முறை எப்படிப்பட்ட கேள்விகள் கேட்டாலும் பதில் கூற மறுக்கும் 'அசமந்தங்கள்' பற்றி சிறு குறிப்பு தருக.

ப: எத்தனையோ பேருடைய கேள்விகளுக்குப் பதில் கிடைக்க, நம்முடைய கேள்விகளுக்குப் பதில் கிடைக்காததன் காரணம் கேள்விகளின் மந்தத்தனம் என்பதை உணராத அசமந்தங்களை விட அவர்கள் மேல்!

⌘ ஆர். பிரபாகரன், கரப்பாடி

கே. இவ்வளவு செலவு செய்து உலகத் தமிழ் மாநாடு நடத்துவதால் என்ன லாபம்?

ப: இது பெரிய கேள்வி. இவ்வளவு செலவு செய்தவர்கள் வேறு ஒரு காரியமும் செய்திருந்தால் தமிழுக்கு நல்ல சேவை செய்த மாதிரி ஆகியிருக்கும். பல வருடங்களுக்கு முன்பு 'மர்ரே' ராஜம் என்னும் தனிமனிதர் செலவைப் பொருட்படுத்தாமல் தமிழ் இலக்கிய நூல்களை ஒரு ரூபாய் பதிப்பாக வெளியிட்டார். அதன் காரணமாகப் பலர் தமிழ் இலக்கிய நூல்களை வாங்கிப் படிக்க முடிந்தது. அதன் பிறகு யாரும் இப்படி முயற்சி செய்யவில்லை. தமிழக அரசே மலிவுப் பதிப்புகளாக இலக்கியங்களை வெளியிட்டிருக்கலாம். இப்போது கூட இதில் கவனம் செலுத்தலாம்.

⌘ வி. ஜெயகுமார், கண்ணம்பாளையம்

கே. பல எழுத்தாளர்கள், மேலெழுந்த வாரியாகத் தெரிந்து கொண்ட விஷயங்களை வைத்துக் கொண்டே கதை திரித்து விடுகிறார்களே?

ப: ஆட்டிறைச்சியின் ருசியைத் தெரிந்துகொள்ள முழு ஆட்டையும் சாப்பிட வேண்டும் என்று அவசியமில்லை. ஒரு மட்டன் கட்லெட் சாப்பிட்டாலே போதும். ஆகவே சில விஷயங்களை மேலெழுந்தவாரியாகத் தெரிந்து கொண்டாலே போதும். (பிரமாதமாக இருக்கிறதே பதில் என்றுநினைப்பவர்கள், சாமர்செட் மாம் அவர்களைப் பாராட்டுங்கள்.)

⌘ பி. சின்னக்கண்ணன், கோபிச்செட்டிப் பாளையம்

கே: பைரனின் கவிதை நடை எப்படி?

ப: அற்புதம். தென்றல் போன்ற ஜிலுஜிலுப்பையும் உணர்வின் அஸ்திவாரங்களை மெல்ல வருடும் அற்புதத்தையும் ரஸித்து அனுபவிக்க ஒரு பிறவி போதாது. காலம் காலமாக நம்மை ஆக்கிரமித்துக் கொள்ளும் வார்த்தை ஜாலங்கள் அவை. (நமக்குள் இருக்கட்டும்: பைரனை நான் படித்ததில்லை!)

⌘ இரா. சேகரன், மதுரை-1

கே: இதுவரை 11 கார்டுகளில் 22 கேள்விகள் கேட்டுள்ளேன். பதில் இல்லை என்ன செய்வது?

ப: 22 கார்டுகளில் 11 கேள்விகளைக் கேட்டுப் பாருங்களேன்!

⌘ என். ராமகிருஷ்ணன், திம்மராஜபுரம்

கே. இரண்டு வயது குழந்தைகூட வெளி நாடுகளில் நீச்சல் அடிக்கிறதே?

ப: ஆம். நீச்சலின் முக்கியத்துவத்தை அவர்கள் உணர்ந்திருக்கிறார்கள். ஒவ்வொரு மனிதனுக்கும் நீச்சலும், சைக்கிள் விடவும் தெரிந்திருக்க வேண்டும் என்பது என் கருத்து.




பரிசு பெறுபவர்.

என். ராமகிருஷ்ணன்
3/11 பெருமாள் கோயில் தெரு,
திம்மராஜபுரம் 627353

# நெருப்பும் நம் பொறுப்பும்

ஸ்பென்ஸர். கயிறு வேலிகளிட்டுக் காத்து நிற்கும் காவல் துறையினரின் அனுமதியோடு நுழைகிறேன். தீயணைப்பு எஞ்சின்களின் ஹோஸ் 'பைப்'கள் கால்களில் இடறுகின்றன. கலைக் கூடமாகத் திகழ்ந்த வியாபாரக் கூடம் கரியாகிக் கிடக்கிறது. ''அரசே... என் வீட்டில் படுத்துக்கொண்டே வானில் மின்னும் நட்சத்திரங்களை எண்ணலாம்'' என்ற சங்க காலப் புலவன் கூற்றுக்குச் சான்று கூறுவதுபோல் கூரை முழுவதும் 'அவுட்'. எந்நேரமும் விழுந்து விடுவேன்' என பயமுறுத்தும் சுவர்களுக்கு நடுவே எரிந்து முடிந்த விளக்குகள். 'கணக்கு' தீர்ந்த கால்குலேட்டர்கள். எடை இழந்த வெயிட் மிஷின்கள். இறகொடிந்த மின் விசிறிகள். நெருப்பு நோயால் இறந்து கிடக்கும் மருந்துப் பாட்டில்கள், பிரிந்து கிடக்கும் ஃப்ரிஜ்கள். இத்தனை நெருப்புக்கு அருகே இருந்தும் கண்ணகியாய் எரியாமல் நிற்கும் ஒரு பெண்ணின் கட் அவுட். அத்தனையையும் பார்த்துச் சிரிப்பது போல் ஆங்காங்கே நெருப்புக்கு 'டிமிக்கி' கொடுத்த எவர்சில்வர் ஸ்பூன்கள்.

ஸ்பென்ஸர் நிறுவனத்தின் செயல் இயக்குனரைச் சந்தித்து, புதுப்பிக்கப்படும்போது ஸ்பென்ஸரின் தோற்றமே மாறிவிடுமா என்று வினவியபோது, ''ஒரு நாளுமில்லை'' என்றார்.

''இதுபோன்ற அழகிய வேலைப்பாடுகள் கொண்ட கட்டிடத்தை இந்தியாவிலேயே எங்கும் பார்க்க முடியாது என்று தைரியமாகச் சொல்வேன். புராதனமான கலையுணர்வுடன் கூடிய ஷோரூமை முன்னிருந்தது போலவே திரும்ப அமைக்க நினைத்துக் கைதேர்ந்த கட்டிடக் கலை நிபுணர்களை அழைத்துள்ளோம்.




நல்ல வேளையாக இக்கட்டிடத்தின் எல்லா இடங்களின் புகைப் படங்களையும் முன்பே எடுத்து இருக்கிறோம். எனவே முன்பு இருந்தது போலவே புதுப்பிப்போம்.

''கட்டிடத்தை இனி நெருப்புத் தீண்டாதவாறு தீயிலிருந்து பாதுகாப்பு அளிக்கும் பெயிண்ட் பயன்படுத்தப் போகிறோம். அதோடன்றி ஒரு தீயணைக்கும் நிலையத்தையே எங்கள் காம்பவுண்டுக்குள் அமைக்கப் போகிறோம்!

''கட்டிடத்தின் முகப்பில் பெரிய தோட்டம் போடப் போகிறோம். இப்போது அங்கே கார்கள் நிற்கின்றன. எதிர்காலத்தில் அவை கன்னிமாரா ஓட்டலின் அடிவாரத்தில் அமையப்போகும்பாதாள 'கார் பார்க்'கில் நிற்கும்!''

✕ திருசோக்கன்



எங்கிருந்தமனம் இதையெல்லாம் கேட்டு நிறைவு பெற வெளியேறும் போது, "We know how you feel... Do you know we are already back at work?" - செந்தூர வண்ணத்தில் நம் விழிகளை இதமாகத் தடவுகிறது ஓர் அறிவிப்பு.

நேற்று எல்.ஐ.சி. இன்று, ஸ்பென்ஸர். நாளை...? இதற்கு முடிவுதான் என்ன..? தீயணைப்புத் துறை தலைவர் திரு நியூட்டன் தேவசகாயம் மேற்பார்வையில், ஸ்பென்ஸரை இயன்றவரை காப்பாற்றிய, தீயணைப்பு கோட்ட அலுவலர் திரு சொக்கன் அவர்களைப் பேட்டி கண்டபோது....

கேள்வி: வீட்டில் தீ விபத்துக்களை எப்படித் தடுப்பது?

ப: எரிந்து கொண்டிருக்கும் அடுப்பை அணைக்காமல் வீட்டைப் பூட்டிச் செல்வது, சிம்னி இல்லா விளக்கைப் பயன்படுத்துவதோடு அதன் ஜ்வாலை எட்டுகின்ற தூரத்தில் துணிகள், காகிதங்கள் ஆகியவற்றை வைப்பது, நைலான் புடவை அணிந்து சமையல் செய்வது, காஸ் அடுப்பைச் சரியாக மூடாமல் வைப்பது...இவையெல்லாம் ஆபத்தை வரவேற்கின்ற காரியங்கள்.

கே: தொழிலகங்களில்....?

ப: 'பெட்ரோல்', ஆல்கஹால் போன்றவற்றில் அவை மட்டுமின்றி அவற்றின் வாயுவும் நன்கு எரியக் கூடியது. எனவே அவைகளை மிகக் கவனமாகக் கையாள' வேண்டும். மின்சாரத் தீயைப் பொறுத்த வரையில் லைசென்ஸ் பெற்றுள்ள வயர் மென்களைப் பயன்படுத்தி மின் இணைப்புக் கொடுப்பது பழைய ஒயர்களை அவ்வப்போது அகற்றுவது. எந்திரங்களை ஆயுத பூஜை அன்று மட்டும் சுத்தப்படுத்தாமல் தினமும் சுத்தப்படுத்தி 'கிரீஸ்' இட்டு..."

கே: எந்திரங்களைச் சுத்தப் படுத்துவதற்கும் நெருப்புக்கும் என்ன தொடர்பு?

ப: எந்திரங்களில் ஆங்காங்கே தூசி படரும். இந்தத் தூசி எந்திரங்களில் இடப்படும் எண்ணெய், கிரீஸ் போன்றவற்றுடன் ஒட்டிக்கொள்ள – 'ஷார்ட் சர்க்யூட்' காரணமாக இலேசான பொறி விழுந்தால் கூட அப்பொறியைப் பந்தமாக மாற்றும் பணியைச் செய்யும் அழிவு ஆற்றல் தூசிக்கு உண்டு. மேலும் காகிதம், துணி ஆகியவற்றைச் சற்றுஎட்டியே வைக்கவேண்டும்.

கே: பத்திரிகை அலுவலகத்தில் காகிதத்தை விலக்கி வைத்தால் பிழைப்பு நடப்பது எப்படி?

ப: பத்திரிகை அலுவலகம், துணிக் கடைகள், காகித விற்பனை நிலையங்கள், அலுவலகங்கள் முதலியவற்றைப் பாதுகாக்கும் பொறுப்பு அங்கு பணியாற்றும் ஒவ்வொருவருக்கும் இருக்க வேண்டும். குறிப்பாக அப்பகுதிகளில் புகை பிடித்தல் அறவே தடை செய்யப்பட வேண்டும். 'வேலை செய்யும் இடத்தில்தானே புகை பிடிக்கக் கூடாது?' என்று சிலர் வாசலில் நின்று புகை பிடிக்கின்றனர். இது கூடாது. ஏனெனில் எது வேலை செய்யும் இடம், எது வெளிப்புற இடம் என்பது நெருப்புக்குத் தெரியாது. மேலும் வெளியில் பற்றும் நெருப்பு வேலை செய்யும் இடத்தை அணுகாது என்பதற்கு என்ன உறுதி?

கே: 'Fire hydrant' என்ற அமைப்பு ஆங்காங்கே வீதி ஓரங்களில் அமைக்கப்பட்டுத் தேவைப்பட்டால் தீயணைப்புப் படையினர் நீரை எடுத்துக்கொள்ள முன்பு இருந்த வசதி இப்போது இல்லையே...?

ப: அந்த வசதி புதிதாக 'பாதுகாக்கப்பட்ட' குடிநீர்வசதி ஏற்படுத்தப்படும் நகரங்களில் தற்போது அமைக்கப்பட்டு வருகிறது.

கே: பல மாடிக் கட்டிடங்கள் தீயணைப்புப் பணிக்குச்சவால் விடுகின்றன. உண்மையா?

ப: இல்லை. கட்டிட விதிகளைப் பின்பற்றாமல் கட்டப்படும் பல மாடிக் கட்டிடங்களே சிரமம் கொடுக்கின்றன. குறிப்பாகப் பல மாடிக் கட்டிடத்தின் நான்கு புறங்களிலும் எட்டு மீட்டர் வெட்ட வெளி இருந்தால் தீயணைப்பில் சிரமம் இருக்காது. திரை அரங்குகளைப் பொறுத்த வரையில் ஒரு ஆளுக்கு 21 அங்குலம் என்ற கணக்கில் வெளியேறும் வசதி ஏற்படுத்தும் வகையில் சில விதிமுறைகள் உள்ளன.

கே: தீவிபத்து ஏற்படாமல் இருக்க நீங்கள் சொல்லும் பொதுவான யோசனை?

ப: தீ நமக்குப் பல வகைகளில் உதவுகிற நண்பன்தான். ஆனால் அவனை எப்போதும் நாம் கண்காணிக்க வேண்டும். படுக்கைக்குச் செல்லும் முன்பு அல்லது வீட்டுக்கு வெளியே செல்லும்போது சமையல் அறையை ஒரு முறைக்கு இரண்டு முறை கூர்ந்து பார்த்துவிட்டுச் செல்லவும். தேவையில்லா வேளைகளில் 'மெயின்-ஸ்விட்ச்' கீழ் நோக்கியே இருக்கட்டும். வியாபார நிலையங்களைப் பொறுத்தவரையில் இரவும் பகலும் காவல் காக்க வேண்டிய அளவில் காவல்காரர்களை நியமியுங்கள். அவர்களுக்கு நாங்கள் அளிக்கும் சிறிது காலப் பயிற்சி கிடைக்கச் செய்யுங்கள். ஏனெனில் நெருப்பை அணைப்பதற்குத் தனித் திறமை நிச்சயம் தேவை.

நன்றிகூறி விடைபெறும்போது, ஸ்பென்ஸரின் சாமர்த்தியம், சுறுசுறுப்புக்கு மற்றுமொரு எடுத்துக்காட்டாக என்னைக் கடந்து செல்லும் ஸ்பென்ஸரின் வாகனம் ஒன்றில் காணப்பட்ட அறிவிப்பு.... Spencer back to normal. Thank you for your sympathy' அனுதாபப்படாத கல் நெஞ்சர்கூட இந்த வாசகத்தைப் பார்த்தால் நெகிழ்ந்துவிட மாட்டாரோ? பேட்டி: ஜெயஸ்ரீ: சிக்கி

புகைப்படம்: சிக்கி, பாலாஜி

---

நடிகை : "அம்மா! இந்தப் பத்திரிகையில் உன் பேட்டி வந்திருக்கு!"

அம்மா: "என்னது! என் பேட்டியா?"

நடிகை:"ஆமா! போனவாரம் என்னைப்பேட்டி காணவந்த நிருபர் கேட்ட கேள்விக்கெல்லாம் நீயே பதில் சொல்லிக்கிட்டிருந்தியில்ல... நடிகையின் அம்மாவுடன் ஒரு பேட்டினு அதை வெளியிட்டிருக்காங்க இந்தப் பத்திரிகையில்!"

-உ. ராஜாஜி





# குட்டுப்பட்டார், கே.பாலசந்தர்!



அமைச்சர் ஆர். எம். வீ. சொன்னார்: ''தீபாவளி யன்று ரிலீஸான ஒரு படத்தின் இயக்குனர் படம் ரிலீஸாவதற்கு முன்பு தன்னை ஒப்பந்தம் செய்ய வந்த தயாரிப்பாளரிடம் ''பெரிய நடிகர் நடிகைகளைப் போட்டால் அவர்கள் இழுப்புக்கு நாம் போகவேண்டி யிருக்கும். நாம் யாரைப் போட்டாலும் படம் ஓடும். ஏன் உங்களையே நடிகராகக் கூடப் போடலாம்'' என்று கூறினாராம். தீபாவளிக்குப் படம் ரிலீசான பிறகு நிலைமை மாறி விட்டது. புகழ் பெற்ற நடிகர் நடிகை களிடமே அந்த இயக்குனர் போயிருக்கிறார். நான் முன்பே சொல்லி யிருக்கிறேன். பாலசந்தர் அச்சு என்றால் இப்பொழுது வந்திருப்பவர்கள் எல்லாம் வார்ப்புக்கள். வார்ப்புக்கள் வாய் கிழியப் பேசக் கூடாது!''

இப்படி பத்திரிகை கிசுகிசு பாணியில் அமைச்சர் ஆர். எம். வீரப்பன் பேசினார். இதில் நகைச்சுவையான அம்சம் என்னவென்றால் அவரே கிசுகிசுபாணி யில் பத்திரிகைகள் எழுதக்கூடாது என்று இடித்துக் காட்டியதுதான்!

● ● ●

நன்றி சொல்ல வந்தார் பாலசந்தர்: ''சத்யா மூவிஸ் படத்தின் 'தெய்வத் தாய்' நான் முதன் முதலில் திரைக் கதை வசனம் எழுதிய படம். அன்று ஆர்.எம்.வீ.யால் உருவாக்கப்பட்டேன். நான் வசனம் எழுதி அனுப்புவேன். ஆர்.எம். வீ. அதைத் திருத்தி எனக்கு அனுப்புவார். நான் எழுதிய ஒரு ஸீனும் அதில் இருக்காது. ஆரம்ப குட்டே அழுத்தமாக விழுந்த தால்தான் இன்றளவும் என்னால் நிலைத்து நிற்க முடிகிறது.''

● ● ●

இசை அமைப்பாளரும் இயக்குனருமான டி. ராஜேந்தருக்குக் (படம்) கோபம் வந்துவிட்டது. 'ஒருதலை ராகம்' படத்தின் பாடல்களை நீங்கள் இயற்ற வில்லை இசை அமைக்க வில்லை என்றெல்லாம் சொல்கிறார்களே' என்று நான் தெரியாத்தனமாகக் கேட்டதன் விளைவு உணர்ச்சிப் பிழம்பாகி விட்டார். ''நான் சவால் விடுகிறேன். என்னோடு யார் வேண்டுமானாலும் எங்கு வேண்டுமானாலும் மோதிப் பார்க்கட்டும். பதினைந்தே நிமிடங்களில் பாடல்களை எழுதி இசை அமைக்கிறேன்'' என்று பாய்ந்தார். 'வசந்த அழைப்பு'களுக்குப் பிறகு, இன்று 'ரயில் பயணம்' டைரக்ட் செய்து கொண்டிருக்கிறார் ராஜேந்தர்.

● ● !

லக்ஷ்மி நாலு வார்த்தை பேசினாலும் நறுக்குத் தெறித்தாற் போல் பேசுவதில் வல்லவர். 'பொல்லாதவன்' 100வது நாள் விழாவில் இவரைக் கடைசியாக நன்றி கூற அழைத்தார்கள். மைக்கைப் பிடித்தவுடன் ''நாம் எல்லோரும் பொல்லாதவர்கள். ஒருவருக்காவது இந்தப் படத்தில் நடித்த கருணிராஜன் ஞாபகம் வரவில்லையே! அவர் மனைவி முத்து லட்சுமியையும் ஏனோ கூப்பிடவில்லை. வாணி ஜெயராம் அவர்களுக்கும் அழைப்பிதழ் இல்லையாம்'' என்றெல்லாம் தமது ஆதங்கத்தை வெளியிட்டார்.

— சலன்



# மிதவாதிகளுடன் போர்!

"உப்பென்றும் சீனியென்றும்
  உள்நாட்டுச் சேலை யென்றும்
    செப்பித் திரிவாரடீ — கிளியே
      செய்வதறியாரடீ!
யந்திரசாலை யென்பார்
  எங்கள் துணிகளென்பார்
மந்திரத்தாலே எங்கும்கிளியே
  மாங்கனி வீழ்வதுண்டோ?

திலகர் சகாப்தத்திலே காங்கிரசிலிருந்த மிதவாதிகள் சுதேசிப் பொருள்களையே வாங்க வேண்டும் என்று மக்களுக்குப் போதித்தார்கள். ஆனால், சந்தைக் கடையிலே சுதேசிப் பொருள்கள் தேவைப்படும் அளவுக்குக் கிடைக்காத காலம்! கதராடை தோன்றாத காலம்! சுதேசிப் பொருள்களையே வாங்க வேண்டுமென்று போதித்த தேசியத் தலைவர்கள் அந்தப் பொருள்களை உற்பத்தி செய்யவோ, அதற்காகக் கிராமக் கைத் தொழில்களை வளர்க்கவோ திட்டம் திட்டவில்லை. அது பற்றி அவர்கள் சிந்திக்கவும் இல்லை.

விடுதலைப் போர்க் களத்தின் தளபதிப் பொறுப்பைக் காந்தியடிகள் ஏற்ற பிறகுதான் அன்னியத் துணிக்கு மாற்றாக கதர்த் துணியை உற்பத்தி செய்ய அவர் வழி வகுத்தார். பரதேசிப் பொருள்களுக்குப் பதிலாக சுதேசிப் பொருள்களை உற்பத்தி செய்ய ஊக்கமளித்தார்.

மிதவாதிகள் மீது போர்க் களப் புலவர் பாரதிக்கு எல்லையற்ற கோபம். அதனால், "பெண்களின் கூட்டம்", "அலிகளின் கூட்டம்" என்றெல்லாம் அவர்களை ஏசுகிறார்.

கண்க ளிரண்டிருந்தும்
  காணும் திறமையற்ற
    பெண்களின் கூட்டமடீ — கிளியே!
      பேசிப் பயனென்னடீ!
சொந்த அரசும் புவிச்
  சுகங்களும் மாண்புகளும்
    அந்தகர்க் குண்டாகுமோ? — கிளியே!
      அலிகளுக் கின்ப முண்டோ?

கடுமையான தாக்குதல்தான்! "பழித்து அறிவுறுத்தல்" அல்லவா!

காங்கிரசிலிருந்த மிதவாதிகள் "வந்தே மாதரம்" என்று வாய் மணக்கக் கோஷிப்பதில் தீவிரவாதிகளுக்குப் பின்வாங்கியவர்கள் அல்லர். மிதவாதிகள் ஆதிக்கத்திலிருந்த போதுதான் "வந்தே மாதரம்" கோஷத்தைத் தாரக மந்திரமாக ஏற்றது காங்கிரஸ் மகா சபை. ஆனால், மிதவாதிகள் "வந்தே மாதரம்" என்று கோஷித்தது உதட்டளவில்தானாம்! அவர்கள் உள்ளத்திலே அது ஒட்டவில்லையாம்!

"சிந்தையில் கள் விரும்பிச்
  'சிவசிவ' வென்பது போல்
    வந்தே மாதர மென்பார் — கிளியே
      மனதிலதனைக் கொள்ளார்!

"வந்தே மாதரம்" என்பதன் பொருள் தேசத்தாயை வணங்குகிறேன் என்பதன்றோ!

"தாயைக் கொல்லும் பஞ்சத்தைத்
  தடுக்க முயற்சி யுறார்
    வாயைத் திறந்து சும்மா — கிளியே!
      வந்தே மாதர மென்பார்!"

என்று பழித்தறிவுறுத்துகிறார் பாரதியார்.

1907ம் ஆண்டிலே "மின்டோ-மார்லி சீர்திருத்தம்" என்ற பெயரில் ஒரு அரசியல் திட்டத்தை பிரிட்டிஷ் ஆட்சி இந்தியாவுக்கு வழங்கியது. அது 1909ல் அமுலுக்கு வந்தது. அதுதான் பிரிட்டிஷ் அரசு முதன் முதலாக வழங்கிய அரசியல் சீர்திருத்தம். அதிலே, இந்திய மக்களுக்கு உரிமைகள் வழங்கப்படவில்லை. நாட்டில் நிலவிய வறுமையை ஒழிக்க வழிவகுக்கப்படவில்லை. மக்களுடைய கல்வியின்மையைப் போக்கப் பள்ளிக்குச் செல்லும் பருவத்தை அடைந்துவிட்ட சிறார்களுக்கெல்லாம் கட்டாய இலவசக் கல்வியளிக்கக் கூட அந்தச் சீர்திருத்தமானது வழிகாட்டவில்லை.

இத்தனைக்கும் மாறாக மெகாலே கல்வித் திட்டப்படி ஆங்கிலம் பயின்று பி.ஏ., எம்.ஏ. பட்டங்களைப் பெற்றவர்கள் சட்ட மன்றங்களிலே உறுப்பினர் பதவிகளைப் பெற வழி செய்தது. மாநிலத்திலே கவர்னர் நிர்வாக சபையில் ஒருவரும், மத்தியில் வைசிராய் நிர்வாக சபையில் ஒருவருமாக இந்தியர் உறுப்பினராவதற்குச் சலுகை கொடுத்தது. அதற்கு மேல் மக்களுடைய வாழ்க்கைத் தரத்தை உயர்த்த ஒருசிறிதும் உதவி செய்யவில்லை. இப்படிப்பட்ட மோசமான ஒரு திட்டத்தை மிதவாதிகள் வரவேற்றனர். அதனை வழங்கியதற்காக பிரிட்டிஷ் அரசுக்கு நன்றியுஞ் செலுத்தினர். மின்டோ—மார்லி சீர்திருத்தத்தைத் திலகர் குழுவினர் வெறுத்தனர். அந்த வெறுப்பை எதிரொலிக்கும் வகையில் பாரதியார் ஒரு பாடல் புனைந்தார். "சுதந்திரப் பெருமை" என்ற தலைப்பில், எழுச்சி மிக்க பாடல் அது!

(மயிலை இலக்கிய வட்டம் பாரதிய வித்யா பவன் சொற்பொழிவிலிருந்து.)

ம.பொ.சி

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd, at the Bharathan Press, Race Course Road Guindy, Madras-600 032. (Phone: 431543) Editor: K. Rajendran

# தகடுகள் டிஸ்க்ராலாக இருந்தால் உங்களால் சேதம் பண்ண முடியாது



பெரும் வாரியான முக்கிய தொழில் சாலைகளுக்கான இரும்பு, நிலக்கரி மற்றும் பிரத்யேக தாதுப் பொருள்களை பெருமளவு கையாளுவதற்கு டிஸ்க்ரால் தகடுகள் மிகவும் உகந்ததாக இருக்கின்றன. டிஸ்க்ரால் தகடுகளின் பயனை எரிக்கலவாய்—கூடைகள், தடுப்புத் தகடுகள், மதகுக்கதவுகள், வேகமாக அசைகின்ற தகடுகள், தானிய இயந்திரங்களில் உபயோகிக்கும் பிரத்யேக தகடுகள், சுத்தியல் மில்கள் போன்ற இடங்களில் நன்கு காணலாம் .... முரட்டுத்தனமான உபயோகிக்கும் இடங்களிலும், தேய்வின் பயங்கரம் அதிகமாக உள்ள இடங்களிலும் டிஸ்க்ரால் மிகவும் பயன் படுகிறது.

பிரத்யேக தேய்வுத்தடுப்பின் திறத்தினாலும், புத்திசாலித்தனமான உலோகக்கலவையால் செய்யப்பட்டதாலும், டிஸ்க்ரால் தகடுகள், கீறல்களாலும், அரைத்தல்களாலும், அல்லது வெட்டுதலாலும் ஏற்படுகின்ற சேதத்தைத் தடுக்கின்றன. இதன் பயன், அடிக்கடி இயந்திரங்களின் பாகங்களை மாற்றும் நிலைமையையும், அநாவசியமான நேரச்செலவுகளையும், பணச்செலவுகளையும் தடுக்கிறது. எல்லாவற்றைக் காட்டிலும் டிஸ்க்ரால் கருவிகளை உருவாக்குவதில் எளிமையையும் உறுதியையும் இணைக்கிறது. தகடுகளின் இணைப்பு, இயந்திர வேலைப்பாடு, வெட்டுதல், துளையிடுதல் மற்றும் வளைத்தல், எல்லாம் எளிது- உங்களுக்கு வேண்டுமா?

**மேலும் விவரங்களுக்கு கீழ்க்கண்டவர்களுக்கு எழுதவும்:**

- டைரக்டர் ஆப் மார்க்கெட்டிங்
  தி டாடா அயர்ன் அண்ட் ஸ்டீல் கம்பெனி
  லிமிடெட்
  43, சௌரங்கி ரோடு, கல்கத்தா-700 071
- ஜாயிண்ட் சீப் ஆப் புரொடக்ஷன் கண்ட்ரோல்
  தி டாடா அயர்ன் அண்ட் ஸ்டீல் கம்பெனி
  லிமிடெட்
  ஜம்ஷெட்பூர் 831 001
- சீனியர் அப்ளிகேஷன் இன்ஜினியர்
  தி டாடா அயர்ன் அண்ட் ஸ்டீல் கம்பெனி
  லிமிடெட்
  நியூ இந்தியா அஸ்யூரன்ஸ் பில்டிங்
  87, மஹாத்மா காந்தி ரோடு
  பம்பாய் 400 023
- சீனியர் அப்ளிகேஷன் இன்ஜினியர்
  தி டாடா அயர்ன் அண்ட் ஸ்டீல் கம்பெனி
  லிமிடெட்
  பேங்க் ஆப் பரோடா பில்டிங்
  16, பார்லிமண்ட் ஸ்ட்ரீட்
  புது டெல்லி 110 001
- சீனியர் அப்ளிகேஷன் இன்ஜினியர்
  தி டாடா அயர்ன் அண்ட் ஸ்டீல் கம்பெனி
  லிமிடெட்
  20ஜெ, மஹாத்மா காந்தி ரோடு
  பெங்களூர் 560 001
- சீனியர் அப்ளிகேஷன் இன்ஜினியர்
  தி டாடா அயர்ன் அண்ட் ஸ்டீல் கம்பெனி
  லிமிடெட்
  பார்க் சென்டர், 24 பார்க் ஸ்ட்ரீட்
  கல்கத்தா 700 016
- அப்ளிகேஷன் இன்ஜினியர்
  தி டாடா அயர்ன் அண்ட் ஸ்டீல் கம்பெனி
  லிமிடெட், இந்தியன் பாங்க் பில்டிங்ஸ்
  31 நார்த் பீச் ரோடு [மூன்றாவது மாடி]
  மதராஸ் 600 001

TIS 3563R3




**டாடா ஸ்டீல்**

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka




# நகரெங்கும் அணி செய்வோம் அதன் துவக்கமாக உங்கள் வீடுகள் அணி பெறட்டும்.

திறமை மிக்க இளங்கலைஞரது வண்ண ஓவியங்களை, சுவரணைச் சட்டங்களிலும் (hoardings), சுவர்களிலும், கட்டிடங்களிலும் தீட்டுவோம். பெரு நகரங்களை அணி செய்வதன் ஆரம்பமாக! வழக்கமான விளம்பர வாக்கியங்களை விட அழகு மிக்கவையாக இருக்கும் இவை.

மேலும், நகரமே அழகொளி பெற்றுத் திகழும். இளங்கலைஞர்தம் திறமை ஆதரவு பெறும். சிறந்த கலையைக் கண்டு ரசிக்க உங்களுக்கும் ஒரு வாய்ப்பாகும் அல்லவா?

உங்கள் வீட்டை அணி செய்ய நீங்கள் உபயோகிக்கும் வண்ணங்களையே, இப்பணிக்கும் நாம் பயன்படுத்துவோம். அவ்வண்ணங்கள் தாம் கர்வாரே பெயின்ட்ஸ்.

கர்வாரே ஸின்த்தெடிக் இனுமல்களும், அக்ரிலிக் இமல்ஷன்களும் பல்வகை வண்ணங்களில் கிடைக்கின்றன. கண்ணுக்கிதமான இளம் வண்ணங்கள். அழுத்தமான, பளிச்சிடும் வண்ணங்கள். வெயில், மழை இவற்றால் பாதிப்புறாத வண்ணங்கள். ஒழுங்காகப் பரவக் கூடியவை. நீரால் கழுவக் கூடியவை. ஆண்டாண்டுகள் நீடிப்பவை. உங்கள் வீட்டை எழிற் களஞ்சியமாக்கும்; அது கண்டு உங்கள் மனம் மகிழ்ச்சியிலாழும்!

வாருங்கள். கர்வாரே பெயின்ட்ஸ் கொண்டு, நகரெங்கும் அணிசெய்வோம்.






**கர்வாரே பெயின்ட்ஸ்**



HTB-CPL-62 96